# கல்கி

KALKI 5.6.94 ரூ. 3.00





ஒரே குரலில் பேசும் இருவர்!

Suresh

# பாதுகாப்புக் கேட்கும் போலீஸ் அதிகாரி!

"நான் இந்த மாதத்தோடு ஓய்வு பெறப் போகிறேன். ஓய்வுக்குப் பிறகு எனது உயிருக்கும் உடைமைக்கும் போலீஸ் பாதுகாப்புத் தரப்பட வேண்டும்!" என்று கேரள அரசிடமும் உயர்நீதி மன்றத்திடமும் விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார் ஒருவர். அவர்தாம் கேரள போலீஸின் இன்ஸ்பெக்டர் ஜெனரல் கே. லட்சுமணன். அப்படியென்ன ஆபத்து இவருக்கு?

"நான் பல கிரிமினல்களை தயவுதாட்சண்யமின்றிப் பிடித்துத் தண்டனை வாங்கித் தந்திருக்கிறேன். அவர்கள் எனக்கு எதிராக உள்ளார்கள். அவர்களுக்கு ஆதரவாக உள்ள சில போலீஸ் அதிகாரிகளும் கூட எனக்கு எதிராக உள்ளார்கள். அதோடு எல்லா அரசியல் கட்சிகளிலும் எனக்கு எதிரானவர்கள் இருக்கிறார்கள். 'நீ ஓய்வு பெற்ற பிறகு உன்னைத் தீர்த்துக் கட்டிவிடுகிறோம்!' என்று எனக்கு டெலிபோன் மிரட்டல்களும் வருகின்றன!" என்று தமது விண்ணப்ப மனுவில் அவரே குறிப்பிட்டிருக்கிறார்.

இந்த நிலையில் நீதிக்காகப் போராடும் ஒரு சாதாரணக் குடிமகனின் பாதுகாப்புக்கு என்ன உத்தரவாதம் இருக்க முடியும்?

## பிப்ரவரியில் முப்பது நாட்கள்!

அரசு ஊழியர்களுக்குத் தரப்படும் மருத்துவச் செலவு (மெடிகல் ரீ-எம்பர்ஸ்மெண்ட்)களை நிறுத்துவது பற்றிக் கேரள அரசு யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் எம்.எல்.ஏக்கள் மட்டும் ஜோராக இந்தத் தொகையை வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இதில் ஓர் எம்.எல்.ஏ. 30.2.94 என்று தேதியிட்டு மனு எழுதிப் பணமும் வாங்கியிருக்கிறார். லீப் ஆண்டில் கூட பிப்ரவரி மாதத்திற்கு இருபத்தி ஒன்பது நாட்கள்தான் என்பதைப் பணம் பண்ணும் ஆர்வத்தில் எம்.எல்.ஏ. மறந்தே விட்டார்!

## ஊர்வலங்களை எதிர்த்து ஓர் ஊர்வலம்!

பல்வேறு அரசியல் கட்சிகளும் ஊர்வலங்களை நடத்தி மக்களை அவதிக்குள்ளாக்குவதை எதிர்த்து ஓர் ஊர்வலம்! கோட்டயத்திலுள்ள ஆறு பொதுநல அமைப்புகள் சேர்ந்து இதை நடத்தின. இந்த ஊர்வலம் போக்குவரத்தை பாதிக்காமல் சாலையின் ஓர் ஓரத்தில் சென்று சாலையைக் கடக்க விரும்புவோருக்கும் நின்று வழிவிட்டுத் தொடர்ந்தது! மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு.

## 'தண்ணி காட்டுறாங்க!'

பாலக்காட்டிலுள்ள 'வாட்டர் அதாரிட்டி எக்ஸிகியூடிவ் இஞ்ஜினியர்ஸ் ஆபீஸ்'ல் ஓர் அதிசயம்! இந்த அலுவலகம் தொடங்கப்பட்ட போது, 19 பேர் தினசரிக் கூலிகளாக வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். மூன்றாண்டுகளுக்குப் பிறகு அரசு, அவர்கள் வேலைக்குத் தேவையில்லை என்று கூறியது. உடனே அவர்கள் நீதி மன்றம் செல்ல, தொழிலாளர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கப்பட்டது. ஆயினும் வாட்டர் அதாரிடியினருக்கு, அவர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொண்டால் தங்களை நிரந்தரமாக்கச் சொல்லி மீண்டும் கோர்ட்டுக்குச் சென்று விடுவார்களோ என்கிற பயம். அதே சமயத்தில் நீதி மன்றத் தீர்ப்பையும் மீற முடியாது. என்னதான் செய்வது? எந்த வேலையும் கொடுக்காமலேயே அவர்களுக்கு இன்னமும் மாதாமாதம் சம்பளம் கொடுத்துக் கொண்டிருக்கிறது வாட்டர் அதாரிடி. அவர்களும் மாதாமாதம் சம்பள நாளன்று மட்டும் வந்து சம்பளம் வாங்கிக் கொண்டு போகிறார்கள்!



திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ். எஸ். மணி**



# ஒரே குரலில் பேசுவ் இருவர்!

ஹைதராபாத். வி. ஐ. பிக்கள் வசிக்கும் பஞ்சாரா மலைப் பகுதி. லட்சுமி பார்வதியைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு என். டி. ராமராவ் குடிபுகுந்த வீடு. எதிர்க்கட்சித் தலைவராதலால், அரசாங்கத்தின் பலத்த பாதுகாப்பு. நீள வாக்கிலான தாழ்வாரம் போன்ற அறையில் அமர்ந் திருக்கிறார். ஊதுவத்தி மணம் ஆளைத் தூக்குகிறது. ஒரு பக்கத்தில் ஷீரடி சாயிபாபாவின் உருவச்சிலை. பின்புறம் சினிமா ஷீல்டுகள். 'ஆரம்பிக்கலாமா?' என்பது போலப் பார்க்கிறார். வயதின் முதிர்ச்சி தெரிகிறது. குரலில் 'பழைய உணர்ச்சி வேகம் இல்லை. இதைக் குறிப்பிட்ட வுடன் சிலிர்த்துக் கொண்டு 'Without emotions no NTR என்று குரலை உயர்த்திப் பேச ஆரம்பிக்கிறார்....

**கேள்வி** : 1982 இல் தெலுங்கு தேசக் கட்சியைத் துவக்கிய போது, தொண்டர்களுக்கு இருந்த அதே வேகம் இப்போதும் இருக்கிறதா?

***என்.டி.ஆர்*** : சந்தேகமே வேண் டாம்! தொண்டர்களின் ஆர்வமும் வேகமும், முன்னைவிட இப்போது அதிகமாகி இருக்கின்றன. அதேபோல் தாழ்த்தப்பட்டவர்களும், பிற்படுத்தப் பட்டவர்களும், பெண்களும், நலிந்த பிரிவினரும் எங்கள் கட்சியின் மீது மிகுந்த நம்பிக்கையுடன் உள்ளனர். இடையில் காங் கிரஸை ஆட்சி பீடத்தில் ஏற்றியதற்காக வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

***கேள்வி*** : தொண்டர்கள் ஆர்வத் தோடு இருப்பதாகச் சொன் னீர்கள். ஆனால் உபேந்திரா போன்ற தலைவர்கள் உங் களை விட்டுப் போய் விட் டார்களே! தவிர, தெலுங்கு தேச பாராளுமன்றக் கட்சியும்

உடைந்து விட்டதே! இது ஏன்?

**என். டி. ஆர் :** இதற்கு நான் என்ன சொல்ல முடியும். விபீஷணர்கள் இந்தக் காலத்திலும் இருக்கிறார்களே! ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். மக்கள் மன்றம் அவர்களை மன்னிக்காது.

**கேள்வி :** ஆட்சியிலிருந்த போது தெலுங்கு தேசம் செய்த சாதனையாக எதைக் கருதுகிறீர்கள்?

**என்.டி.ஆர்.:** தெலுங்கர்களுக்கு அவர்களது பெருமையை உணர்த்தினேன். கண்ணியத்தைப் பெற்றுத் தந்தேன். பயமில்லாத வாழ்வு மக்களுக்குக் கிடைத்தது. எல்லோருக்கும் ஒரே நீதி. இதையெல்லாம் விட, ஒரு காலத்தில் என்னை வாழவைத்த சென்னை மாநகரின் குடிநீர் பிரச்னையைப் போக்க தெலுங்கு கங்கை திட்டத்துக்கு, அடிக்கல் நாட்டப்பட்டதே! இது ஒரு சாதனை இல்லையா? நாங்கள் ஆட்சியில் இருந்தவரை திட்டத்தை விரைவாக முடிப்பதற்கான எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டோம்.

**கேள்வி :** ஆந்திராவில் இந்த வருடம் சட்டமன்றத் தேர்தல் வருகிறது. தெலுங்கு தேசத்தின் வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கிறது?

**என்.டி.ஆர் :** எங்கள் கட்சிக்கு வெற்றி வாய்ப்பு என்று வெளிப்படையாகச் சொல்வதைவிட, நாட்டில் என்ன நடக்கிறது என்று பாருங்கள். காங்கிரஸ் நாட்டைக் குட்டிச்சுவராக்கிவிட்டது. மனிதனின் அடிப்படையான தேவை - உணவு, உடை, 'இருப்பிடம். இந்தியாவில் எல்லோருக்கும் கிடைத்து விட்டதா? இதுதான் காங்கிரஸ் சாதனையா? (கேலியாகச் சிரிக்கிறார்) ஊழலை எடுத்துக் கொள்ளுங்கள், முந்திராவில் துவங்கி, போஃபர்ஸ், பங்கு மார்க்கெட் என்று தொடர் கதையாகி வருகிறது. போதாததற்கு ரூபாயின் மதிப்பு பொத்தென்று கீழே விழுந்துவிட, மக்களுக்கு வாங்கும் சக்தி அறவே போய்விட்டது. பங்கு மார்க்கெட் மோசடியில் கிட்டத்தட்ட ஒரு லட்சம் கோடி ரூபாய் புரண்டிருக்கிறது! வெட்கமாக இல்லை? இங்கே ஆந்திராவிலும் ஆட்சி எங்கே நடக்கிறது? கோஷ்டி பூசல்களில் காங்கிரஸ் மட்டுமல்ல; ஆட்சியும் அதன் கௌரவ

# லட்சுமி (சிவ) பார்வதி



**வீ**ரகந்தம் வெங்கட சுப்பாராவ் என்பவர் குண்டூர் வட்டாரத்தில் பிரபலமான ஹரிகதை விற்பன்னர். மனைவி இறந்து போன நிலையில் லட்சுமி பார்வதியை இரண்டாம் தாரமாகக் கல்யாணம் செய்து கொண்டார் அவர். படிப்பதில் மிக ஆர்வம் காட்டிய பார்வதியை நன்கு படிக்க வைத்ததுமில்லாமல், சம்ஸ்கிருத விரிவுரையாளர் பதவியையும் வாங்கித் தந்தார் வெங்கட சுப்பாராவ். என்.டி.ஆர். மீது, சுப்பாராவுக்கு ரொம்பப் பிடிப்பு. ராவ்காரு தெலுங்கு தேசத்தைத் துவங்கி மாநிலம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்தபோது, சுப்பாராவ் கூட்டம் சேர்க்கும் பணியைச் செய்து வந்தார். ஓர் ஊருக்கு என்.டி.ஆர். செல்வதற்கு முன் அந்த ஊருக்குப் போய் ஹரிகதைகள் சொல்லி மக்களைத் திரட்டுவார். பின்னர் என்.டி.ஆர். அங்கு வந்தவுடன் அடுத்த ஊருக்குச் சென்று விடுவார்.

கணவர் மூலமாக, ராமராவ் அறிமுகம் கிடைத்தது லட்சுமி பார்வதிக்கு. அவரைப் பற்றிய வாழ்க்கை வரலாறு எழுத வேண்டும் என்ற ஆர்வம் காரணமாக அடிக்கடி அவரைச் சந்திக்க ஆரம்பித்தார்.

ஏற்கெனவே மனைவியை இழந்தவர் ராமராவ். வயதான நிலையில் அடுத்தடுத்து இரண்டு மாரடைப்பு தாக்க, மென்கரங்களின் பணிவிடை, பாதுகாப்பு தேவையாக இருந்தது என்.டி.ஆருக்கு. அந்தச் சமயம் வாழ்க்கை வரலாறு தொகுப்புக்காக அடிக்கடி என்.டி.ஆரைச் சந்தித்துக் கொண்டிருந்த லட்சுமி பார்வதி, அவர் இதயத்தைத் தொட்டு விட்டார். சுப்பாராவை விவாகரத்து செய்தபின் என்.டி. ஆருக்குக் கழுத்தை நீட்டினார். இதுதான் என்.டி.ஆர் - லட்சுமி பார்வதி தம்பதியான வரலாறு.

என். டி. ஆர். கல்யாணம், அவரது பெரிய குடும்பத்தைப் புயலெனத் தாக்கியது. ஆனால் யார், யாருக்கு என்னென்ன சேர வேண்டுமோ, அதைச் செய்தபின் முணுமுணுப்பு அடங்கியது. என்.டி.ஆரின் மனைவியின் பெயர் லட்சுமி பார்வதி தான். ஆனால் தம்பதிகளைச் சேர்த்துக் குறிப்பிடும் விதமாகத் தெலுங்கு தேசம் தொண்டர்கள் "சிவ-பார்வதி" என்று அழைக்கத் தொடங்கினர். "சிவ பார்வதியிடம் கேள்விகள் கேட்கலாமா?" என்று நாம் என்.டி.ஆரைக் கேட்ட போது, "நாங்கள் ஒரே குரலில் பேசுபவர்கள். அதனால் தனியாகக் கேட்கும் அவசியமேயில்லை" என்று சாமர்த்தியமாகக் கூறி நம்மை அனுப்பி வைத்தார்!



# கிருஷ்ணாநதி நீர்

கோட்லா விஜயபாஸ்கர ரெட்டி, ஆந்திர முதல்வராகப் பதவி வகிப்பது இது இரண்டாவது முறை. 1980களில் சிறிது காலம், முதல்வராகப் பதவி வகித்து, பின்னர் வந்த தேர்தலில் தெலுங்கு தேசத்துக்கு ஆட்சியைத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்டுப் போனார். பன்னிரண்டு வருடங்களுக்குப் பின் மீண்டும் முதல்வராக வந்திருக்கிறார். 'விஜயபாஸ்கர ரெட்டியின் வரவு, எங்கள் ஆட்சி மீண்டும் வரப் போவதையே உறுதிப்படுத்துகிறது'' என்று இண்டலுடன் சொல்கிறார்கள் தெலுங்கு தேசம் கட்சியினர்.

கமலாபுரி லே-அவுட்டில் உள்ள முதல்வரின் இல்லத்தில் நம் ஊர் அளவுக்குப் பாதுகாப்புக் கெடுபிடிகள் இல்லாவிடினும், வரவேற்பறையின் உத்தரத்தில் மறைவாக வைக்கப்பட்டிருக்கும் கேமரா எல்லோரையும் படமெடுத்துக் கொண்டிருக்கிறது! மக்கள் யுத்தக் குழு (PWG) வுக்குப் பயந்துதான் இத்தனை ஏற்பாடுகள். கலெக்டர்கள் மாநாட்டில் 'பிஸி'யாக இருந்த போதிலும், 'கல்கி'க்கு நேரம் ஒதுக்கிப் பேட்டி கொடுத்தார் விஜய பாஸ்கர ரெட்டி.

**கேள்வி :** நீண்ட இடைவெளிக்குப் பின்னர் முதல்வராக வந்திருக்கிறீர்கள். மாநில வளர்ச்சியிலும் நிர்வாகத்திலும் ஏதேனும் மாற்றத்தைக் காண்கிறீர்களா?

**முதல்வர் :** சென்ற முறை தேர்தல் நெருங்கும் சமயத்தில் நான் முதல்வராக நியமிக்கப்பட்டேன். அப்போது காங்கிரஸின் மீது மக்கள் வெறுப்பில் இருந்தார்கள். காரணம், ஐந்து வருட காலத்தில் நான்கு முதல்வர்கள், கட்சியின் தலைமையால் மாற்றப்பட்டு நிர்வாகம் தடுமாறிக் கொண்டிருந்தது. நான் ஓரளவு சரிப்படுத்துவதற்குள் தேர்தல் வந்துவிட்டது. ஆனால் அந்த மூன்றரை மாதத்திற்குள், குறைந்த விலை அரிசி, மதிய உணவு, விவசாயிகளுக்கு மின் கட்டணத்தில் சலுகை, என்று என்னால் முடிந்தவற்றைச் செய்தேன். இடையில் தெலுங்கு தேச ஆட்சியில் ஒன்றும் நடக்கவில்லை. இப்போது நான் வந்து ஒன்றரை வருடங்களாகின்றன. சரியான பாதையில் மாநிலம் சென்று கொண்டிருக்கிறது.

**கேள்வி :** இங்கு (ஹைதராபாத்தில்) தினசரி மூன்று மணி நேரம் மின்சாரம் வெட்டப்படுகிறது. மாவட்டங்களில் நிலைமை இன்னமும் மோசம்! ஏன் இப்படி?

**முதல்வர் :** தெலுங்கு தேசம் ஆட்சியிலிருந்த போது, நீண்ட காலத் தேவைகளைக் கணக்கிலெடுத்து, மின் திட்டங்களை உருவாக்காமல் இருந்ததால் வந்த கோளாறுதான் இது. நான் முதல்வராக வந்த பிறகு, ராமகுண்டத்தில் விஸ்தரிப்பு, கிருஷ்ணபட்டினத்தில் அனல் மின் நிலையம் ஆகியவற்றுக்கு அனுமதி கிடைத்திருக்கிறது. தவிர, ஏற்கெனவே இருக்கிற அனல்மின் நிலையங்களுக்குத் தடைபடாமல் நிலக்கரி கிடைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அடுத்த சில வருடங்களில் பிரச்னை தீரும் என்று நினைக்கிறேன்.

அதேபோல் விவசாயத்துக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்து கொண்டிருக்கிறோம். ஸ்ரீசைலம் அணைக்

வத்தை இழந்து கொண்டிருக்கிறது!

இந்தச் சூழ்நிலையில் மக்கள், மாற்றாக யார் இருக்கிறார்கள் என்று பார்க்கிறார்கள். ஆந்திராவைப் பொறுத்தமட்டில் தெலுங்கு தேசத்தின் மீது நம்பிக்கை பிறந்திருக்கிறது. அந்த நம்பிக்கையைக் காப்பாற்றுவதே என் முதல் பணி!

**கேள்வி :** வரும் சட்டமன்றத் தேர்தலில் பா.ஜ.கவுடன் தெ. தே. கூட்டணி வைத்துக் கொள்ளுமா?

கால்வாய்களில் புதிய பாசனப் பகுதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. மிளகாய் உற்பத்தியாளர்களுக்கு நல்ல விலை கிடைக்க வசதி செய்துள்ளோம். ரஷ்யாவில் இருந்து இறக்குமதி ஆர்டர்கள் குறைந்துவிட்ட நிலையில், குண்டூர் புகையிலை உற்பத்தியாளர்களுக்கு நூறு கோடி ரூபாய் கடன் தொகை வழங்க ஏற்பாடு செய்தோம். நலிவுற்றவர்களுக்கு இரண்டரை லட்சம் வீடுகள். கடற்கரையோரத்தில் புயல் பாதுகாப்பு இல்லங்கள்...

# சென்னைக்கு எப்போது வரும்?

இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்.

**கேள்வி** : பழைய ஹைதராபாத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்! இப்போது ஸைகந்தராபாத் பகுதியும், சாலையில் ஆக்கிரமிப்பு, முறையற்ற போக்குவரத்து, சாக்கடைக் கால்வாய்கள் என்று நரகமாகி விட்டதே!

**முதல்வர்** : தொள்ளாயிரம் கோடி ரூபாய் செலவில், ஹைதராபாத்தை ஒரு மெகா சிட்டியாக உருமாற்ற ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. உலக வங்கியின் உதவி கிடைத்திருக்கிறது. இரட்டை நகரங்களை இணைக்கும் ஹுஸைன் சாகர் (ஏரி) பதினெட்டு கோடி செலவில் சுத்தப்படுத்தப்பட இருக்கிறது. ஏரியில் வைக்கப்பட்டுள்ள புத்தர் சிலையைத் தலாய்லாமா வந்து திறந்து வைக்கப் போகிறார். சிராக் அரண்மனையை அரசு எடுத்துக் கொண்டிருக்கிறது. நகரில், நடைபாதைகள் போடுவது, சோடியம் விளக்குகள் அமைப்பது என்று ஜரூராக வேலை நடந்து கொண்டிருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டில் வந்து பாருங்கள்; அசந்து போவீர்கள்! நகரின் குடிநீர் பிரச்னையைத் தீர்க்க, கிருஷ்ணா நதி நீரையும் கொண்டு வர ஏற்பாடு செய்ய இருக்கிறோம்.

**கேள்வி** : சென்னைக்குக் கிருஷ்ணா நீர் எப்போது வரும்?

**முதல்வர்** : வேலைகள் முடிவடையும் தருவாயில் இருக்கின்றன. 1995 இல் கண்டிப்பாகக் 'கிருஷ்ணா' சென்னைக்கு வந்துவிடும்.

**கேள்வி** : இது தேர்தல் ஆண்டு! பொதுவாக பத்திரிகைகளில் வரும் செய்திகளைப் பார்க்கும்போது என்.டி.ஆர். மீண்டும் ஆட்சிக்கு வந்துவிடுவார் என்று தோன்றுகிறது. அவரும் நம்பிக்கையோடு செயல்படுகிறார். காங்கிரஸ் எப்படிச் சமாளிக்கப் போகிறது?

**முதல்வர்** : பத்திரிகைகள் தவறான தோற்றத்தைக் காட்டுகின்றன. எங்கள் அரசுக்கு தினசரி ஆதரவு பெருகி வருகிறது. கள், சாராயக் கடைகளை ஒழித்தது மட்டுமில்லாமல், ரேஷன் கடைகளை நடத்தும் பொறுப்பைப் பெண்களுக்கே கொடுத்திருப்பதால், தாய்க்குலத்தின் ஆதரவு எங்களுக்குத்தான். சமீபத்தில் ஏலூரில் மாநாடு நடந்த போது திரண்ட கூட்டம், மக்கள் ஆதரவு எங்களுக்கே என்று நிரூபித்தது. காங்கிரஸின் சாதனைகளை மக்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள். என்.டி.ஆரின் குடும்ப அரசியல் அவரது கட்சியினரையே வெறுப்புறச் செய்திருக்கிறது. என்.டி.ஆர். ஏமாற்ற முடியாது.

**கேள்வி** : ஆந்திராவில் நக்ஸலைட்டுகளின் வன்முறை நடவடிக்கைகள் எந்த அளவில் இருக்கின்றன? சமீபத்தில் உள்துறை ராஜாங்க அமைச்சர் ராஜேஷ் பைலட், விடுதலைப்புலிகளுக்கும், நக்ஸலைட்டுகளுக்கும் தொடர்பு இருப்பதாகச் சொல்லியிருக்கிறாரே!

**முதல்வர்** : 'நூறு சதவீதம் ஒழித்து விட்டோம்' என்று கூறுவதைவிட முன்பு அவர்கள் நடத்திய வன்முறை நடவடிக்கைகள் பெருமளவு குறைந்திருப்பதிலிருந்தே அவர்கள் ஓய்ந்து விட்டார்கள் என்பது உங்களுக்குப் புலப்படும் என்று சொல்வது பொருத்தமாயிருக்கும். மனம் திருந்திய நக்ஸலைட்டுகளுக்குப் புனர்வாழ்வு வசதிகளும் செய்து கொடுக்கப்படுகிறது. மற்றபடி புலிகள் - நக்ஸலைட்டுகள் தொடர்பு பற்றி எங்களுக்கு ஏதும் தகவல் இல்லை.

பேட்டி : **ஸ்ரீநிவாசன்**
படம் : **ராஜன்**

**என். டி. ஆர்** : நிச்சயமாக வைத்துக் கொள்ளாது. மதச்சார்பற்ற கொள்கையில் எங்களுக்கு மிகுந்த பிடிப்பு உண்டு. ஒரு குறிப்பிட்ட சாராரைப் புண்படுத்தும் பா.ஜ.க.வுடன் எங்களுக்குத் தொடர்பும் கிடையாது; தேர்தலில் கூட்டணியும் கிடையாது.

**கேள்வி** : சமீப காலங்களில், பகுஜன் சமாஜ் கட்சி மிகவும் பிரபலமாகி வருகிறது. தாழ்த்தப்பட்ட மக்களின் நம்பிக்கையை

அதன் தலைவர் கன்ஷிராம் பெற்றிருப்ப தாகச் சொல்கிறார்கள். அவரது கட்சியுடன் உடன்பாடு ஏதேனும் வைத்துக் கொள் வீர்களா?

***என். டி. ஆர்.:*** இதுவரையில் அது போன்ற எண்ணம் ஏதுமில்லை. நாங்கள் ஆட்சியிலிருந்த போதுதான் மாநில அரசுப் பணிகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு இட ஒதுக்கீடு கொண்டு வந்தோம். எல்லோ ருக்கும் சமவாய்ப்பு கிடைக்க வேண்டு மென்று நினைக்கும் அதே சமயத்தில், சமு தாயத்தில் நலிந்த பிரிவினருக்குச் சலுகைகள் காட்டப்படுவதும் தொடர வேண்டும் என்று நினைக்கிறேன்.

***கேள்வி :*** தேர்தலில் வெற்றி பெற உங்கள் உத்தி என்ன?

***என். டி. ஆர். :*** மக்களுக்காக, மக்கள் நடத்தும் ஒரு மக்கள் அரசாங்கமாகவே என் அரசு இருக்கும். இதைத்தான் நான் எல்லா இடத்திலும் சொல்லுவேன். சாமான்யர்களுக்கு சகல இடத்திலும் மரி யாதை கிட்டும். உண்ண உணவு கிடைக்கும். நான் கொடுக்கும் வாக்குறுதிகளைவிட என்மேல் அவர்களுக்கு உள்ள நம்பிக் கைதான் என்னை வெற்றிப் பாதைக்கு அழைத்துச் செல்லும்.

***கேள்வி :*** தேசிய முன்னணியில் தெலுங்கு தேசம் இருக்கிறதா? அதன் தலைவர் (chair-man) என்ற முறையில் தே. மு. வின் தற்போதைய நிலை பற்றி என்ன சொல்கிறீர்கள்? தேசிய அரசியலில் ஈடுபடும் எண்ணம் போய்விட்டதா?

***என். டி. ஆர். :*** அதைப் பற்றி ஒன்றும் பேச வேண்டாமே! ஆனால் என்னைப் பொறுத்தவரையில் ஒன்று மட்டும் உறுதி. நாட்டுக்குப் பணியாற்ற வேண்டும் என்ற எனது லட்சியத்திலிருந்து நான் இப்போதும் மாறவில்லை! மாறவும் மாட்டேன்.

***கேள்வி :*** நீங்கள் உங்கள் மனைவி லட்சுமி சிவ பார்வதியை, அரசியல் வாரிசாக உருவாக் குவதாகச் சொல்கிறார்களே?

***என்.டி.ஆர்.:*** (குரலை உயர்த்தி) யாரும், யாரையும் உருவாக்க முடியாது. தங்கள் உழைப்பால், தொண்டால், சுயநலமில்லாத செயல்களால், செல்வாக்கால் உருவான தலைவர்கள்தான் நிலைத்து நிற்பார்களே தவிர, உருவாக்கப்படுகிறவர்கள் நீடித்து நிற்க மாட் டார்கள்.

பேட்டி : **ப்ரியன்**

அட்டை வண்ணப்படமும், படங்களும்: **ராஜன்**

---



# Kalki Shopping Page

# Kalki Shopping Page

## செண்பகம்

பிராண்ட்



### சுத்தமான நெய்

தனலஷ்மி & கோ.,
36, M.G. புதூர் முதல் வீதி
திருப்பூர் - 638 604
போன் : Off : 21557
Res : 22367
100 Grams, 200 Grams
பவுச் பாக்கெட்டுகளிலும்
கிடைக்கும்

BUMA

---

## நீங்கள் இல்லாமலா இந்தப் போட்டி?

ஒரு சவரன் தங்க நகை பரிசு

**பெண் மனதுக்குள் பூஜிப்பாள்**
**அங்கம் - தங்கம்**

அவசியம் கலந்து கொள்ளுங்கள். சரியான விடையைக் குறியிட்ட கூப்பன்களுக்கு குலுக்கல் முறையில் பரிசு உண்டு.
எழுத வேண்டிய முகவரி:



**ஃபாஹிமாஸ்**
**ஜீவல் ஹவுஸ்**

78, உஸ்மான் ரோடு,
(ரங்கநாதன் தெருஎதிரில்)
தி.நகர், சென்னை 600 017.
போன் 445744, 446073

சென்னை உஸ்மான் சாலையில் மட்டும்

---

## ஸ்ரீ தேவி மூகாம்பிகை ஜோதிடம்

**வயதாகியும் திருமணமாகவில்லை? திருமணமாகியும் குழந்தை பிறக்கவில்லை? தொழிலில் ஒரு மந்த நிலையா? வேறு தொழில் துவங்க ஒரு பயம். அயல் நாடு போகுவதற்கு வாய்ப்பு உண்டா இல்லையா?**



இத்தகைய கேள்விகளுக்கு தீர்வுகாண அணுகுங்கள். ஜோதிடர் பரம்பரை வழியாக வந்த இந்தியா, இலங்கை, இந்தோனேசியா, தாய்லாந்து, மலேசியா, சிங்கப்பூர் சென்று பல இன மக்களின் பேராதரவு பெற்ற ஜோதிடர் PROF: A.S. மணி அவர்களை கீழ்க்கண்ட விலாசத்தில் சந்தியுங்கள்.



**8/A, சாந்திவிஹார் காம்ப்ளக்ஸ், லஸ்கார்னர், சென்னை – 600 004. போன்: 840 474.**

தபால் மூலம் ஐந்து கேள்விகள், 50/– ரூபாய் மட்டுமே.

# Kalki Shopping Page

படிக்க! பயன்பெற!! பாதுகாக்க!!!

சிருங்கேரி சாரதா பீட ஜகத்குரு
அனுக்ரஹத்துடன் பிரசுரமாகும்
ஆன்மீக கலாசார மாத இதழ்

அம்மன்

## தரிசனம்

ஆசிரியர்
பாரதிகாவலர் கே.ராமமுர்த்தி

**பம்பாய்க் கோயில்கள்**
**சிறப்பிதழ் : ஜூன் 1994**

அட்டையில், திருப்பதி
தங்கவிமானம் பத்து அரிய
கட்டுரைகள், ராசிபலன்

தனி இதழ் விலை ரூ.5/-
ஆண்டுச் சந்தா ரூ.55/-

அம்மன் தரிசனம்
11-ஏ, ஏ.ஆர்.கே.காலனி
எல்டாம்ஸ் ரோடு, சென்னை-18
போன்:455 899

---

## வேலை வேண்டுமா? இதோ!

**செயற்கை வைரங்கள்**
(அமெரிக்கன் டையமண்ட்ஸ்)

மெருகூட்டும் தொழிற்பயிற்சியில் சேருங்கள்

குறைந்த பட்ச கல்வித்தகுதி: 8வது படிப்பு

| | |
|---|---|
| பயிற்சிக் காலம் | : $1\frac{1}{2}$ மாதம் |
| கட்டணம் | : ரூ. 1500/- |
| பயிற்சி தொடங்கும் நாள் | : 6-6-94 |

**பயிற்சி பெறுபவர்களுக்கு எங்களிடமே
வேலை பெற வாய்ப்பு மிக அதிகம்!**

உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

**V.R. GEMS**
56, GF-1, L.B. ROAD, THIRUVANMIYUR,
Ms-41. Ph: 4914123

---

● PEARLS ● AMERICAN DIAMONDS ● BIRTH STONES ● SEMI PRECIOUS

● CORALS BIG SIZE ● MOHAN MALA GOLD BEADS

JEWELLERY ● CORAL FLOWERS



## HYDERABAD

**CITY KNOWN FOR CHARMINAR
AND PEARLS**





**NARAYANA pearls**

Shop. 4, Basement
KASI ARCADE
116, Thiagaraya Road,
*(Boag Road, Pondy Bazar Junction)*
T. Nagar, Madras - 600 017.

**SHOP KNOWN FOR
HYDERABAD PEARLS
AT HYDERABAD PRICES
ITSELF**

COME AND REPAIR YOUR PEARL SETS (PURCHASED ANYWHERE) WITH OUR SPECIALIST FREE OF COST.

# சிலிண்டர் கவலை தீருமா? விலை

**கா**ஸ் சிலிண்டர் தீர்ந்து போனால், அன்றைக்குச் சமையலே இல்லை என்கிற நிலைதான் பல வீடுகளில். அந்த அளவுக்குச் சமையல் எரிவாயு கனெக்‌ஷன் என்பது வாழ்க்கையின் அத்தியாவசியமானதாகி விட்டது.

ஆயினும் இந்த வசதியை இந்தியா முழுவதிலும் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கும் குடும்பங்களின் எண்ணிக்கை சுமார் இரண்டு கோடிதான். ஒருகோடியே பதினோராயிரம் பேர் பதிவு செய்துவிட்டுக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.



இவர்களுக்கெல்லாம் காஸ் கனெக்‌ஷன் கிடைப்பது எப்போது? இந்தச் சூழ்நிலையில்தான் அரசின் புதிய பொருளாதாரக் கொள்கை வந்தது. இதன்படி இந்தியன் ஆயில், பாரத் பெட்ரோலியம் போன்ற அரசுத்துறை நிறுவனங்களின் ஏகபோக உரிமையாயிருந்த சமையல் எரிவாயு சப்ளையில் தனியாரும் நுழைய வாய்ப் பளிக்கப்பட்டிருக்கிறது.

"அரசின் இந்தச் சலுகையைப் பயன்படுத்தி, கடந்த சில மாதங்களில் சுமார் நூறு நிறுவனங்கள் எல்.பி.ஜி. சிலிண்டர்களை இறக்குமதி செய்து மக்களுக்கு விநியோகிக்கப் போவதாக விளம்பரப்படுத்தி யுள்ளன. வெளிநாடுகளிலிருந்து எரிவாயுவை இறக்குமதி செய்ய முடியும் என்றாலும் அது அத்தனை சுலபமான விஷய மல்ல!" என்கிறார் அகில இந்திய எல்.பி.ஜி. விநியோகஸ்தர்கள் சங்கத் தலைவரான எல். முனி வேலு.

"காரணம் வெளிநாடுகளி லிருந்து கப்பல்கள் மூலம் கொண்டுவரப் பட்டாலும்

அவற்றை நம் நாட்டில் இறக்கி, நாட்டின் பல்வேறு பாகங்களுக்கும் எடுத்துச் செல்லும் வசதியை நமது துறைமுகங்கள் இன்னும் முழுமையாகப் பெற்றிருக்க வில்லை என்பதுதான்!" என்கிறார் முனிவேலு.

துறைமுக வசதிகள் போதுமான அளவில் இல்லாத இன்றைய சூழ்

# ஏழுமா?

நிலையில் இந்தத் தனியார் நிறுவனங்கள் எப்படிச் செயல்படப் போகின்றன?

"முதல் கட்டமாக, ஒவ்வொரு முறையும் இந்தியாவிலிருந்து கப்பல்கள் மூலமாகச் சிலிண்டர்களைச் சிங்கப்பூருக்குக் கொண்டு சென்று, எரிவாயுவை நிரப்பிக் கொண்டு வந்து விநியோகிக்கப் போகிறோம். ஆறு மாதங்கள் இப்படிச் செய்தபின், பதினாறு மெட்ரிக் டன் கொள்ளளவு கொண்ட டாங்குகளில் எரிவாயுவை நிரப்பிக் கொண்டு வந்து, அவற்றை எங்களுடைய ஃபில்லிங் ஸ்டேஷன்களுக்கு அனுப்பி வைப்போம். பிறகு அங்கிருந்து சிலிண்டர்கள் நிரப்பப்பட்டு விநியோகஸ்தர்களுக்கு அனுப்பப்படும்!" என்கிறார்கள், இப்போது ஃபீனா காஸ் சிலிண்டர்களை மக்களுக்கு விநியோகிக்க ஆரம்பித்திருக்கும் மில்டன், நியூட்டன், வின்ஸ்டன் சகோதரர்கள்.


• முனிவேலு


• நியூட்டன், மில்டன், வின்ஸ்டன்

விலை எப்படி? "அரசுத்துறை நிறுவனங்கள் விநியோகிக்கும் சிலிண்டர்களை விட இது அதிகமாகத் தான் இருக்கும். அதாவது பன்னிரண்டு கிலோ எடையுள்ள எங்கள் காஸ் சிலிண்டரின் விலை 155 ரூபாய். (அரசுத்துறையில் 14.2 கிலோ சிலிண்டரின் விலை ரூ. 97.55) டெபாசிட் கட்டணமாக 2100 ரூபாய் கட்ட வேண்டும் (அரசுத் துறையில் ஐநூறு ரூபாய் மட்டும்தான்!). ஆனால் மிக நீண்ட வரிசையில் காஸ் இணைப்புக் காகக் காத்திருப்பவர்கள் இந்த அதிக விலையைப் பொருட்படுத்த மாட் டார்கள் என்பது நிச்சயம்!" என்கிறார்கள் அவர்கள்.

மண்ணெண்ணெய் ஸ்டவ்களோடு போராடிக் கொண்டிருப்பவர்களுக்கு, இது மாதிரியான தனியார் காஸ் ஏஜென்சிகளின் அதிகப்படியான விலை ஒரு பொருட்டாக இருக்காது என்றாலும் விலையிலும் எடையிலும் இத்தனை பெரிய அளவுக்கா வித்தியாசம் இருக்க வேண்டும்?

"தனியாரின் விலையைச் சுட்டிக் காட்டி அரசும் தனது சிலிண்டர்களின் விலையைக் கூட்டுவதற்கு இதுவே ஒரு வாய்ப்பாகப் போனாலும் போய் விடக்கூடும்!" என்கிறார் விஷயம் தெரிந்த ஓர் அதிகாரி.

- எஸ். சந்திரமௌலி

படங்கள் : பாலாஜி


உங்களுக்கு
விழுந்த
ஓட்டுக்களை
அவங்க
எண்ணுவாங்க.
இனிமேல்
-லாம்
நீங்கதான்
எண்ணிப்
பார்க்க
-ணும்...!
தேர்தல்
பிரசாரத்தின் போது
எதிர்க் கட்சிகளின்
குற்றச்சாட்டுகள்


தமிழ் நாட்டில் புலிகளை ஒழிச்சாச்சு
தஞ்சாவூரில்
புலிகள்
வெடிகுண்டு
வீச்சு...

பாரதிராஜா
-க்கு புதுக்
கார் பரிசு
கேப்டன்
மகன்
முதல்
மரியாதை
ஏற்கனவே
சரிவு... இதுல
புதுக்கார்
வேற...
எப்படி போகுதோ...?
கடலோரக்
கவிதைகள்
கிழக்குச்
சீமையிலே



# கல்கி




1994
ஜூன் 5
மலர் : 52
இதழ் : 45
பவ
வைகாசி 22


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## நிமிர்ந்து நின்றார்; கிளிண்டனை வென்றார்!

அமெரிக்கா சென்ற பிரதமர் ஒரு மண்ணும் சாதிக்கவில்லை என்றும்; பக்கம் பக்கமாக நாளிதழ்களில் விளம்பரங்கள் தரப்பட்டன என்றும்; அவர் பேச்சைக் கேட்கக் கூடியவர்கள் மக்கள் பிரதிநிதிகளே அல்ல; 'பிராக்ஸி'கள் தாம் என்றும் அவதூறுகளை அடுக்குவது கபடம். ஆனால் பிரதமரின் விஜயம் வெற்றியே என்பதற்கு எதிர்க்கட்சித் தலைவர்களுள் கண்ணியமிக்க வாஜ்பாயியின் அறிக்கை சான்று.

பிரதமர் அமெரிக்கா புறப்பட்டபோது காஷ்மீர், ராக்கெட் பரிசோதனைகள், அணு ஆயுதப் பரவல் தடுப்பு ஒப்பந்தம் போன்ற விஷயங்களில் அவர் விட்டுக் கொடுத்து விடுவாரோ என்று பலரும் அஞ்சினர். பலவீனமானவராகக் கருதப்பட்ட ராவ், கிளிண்டனுக்கு எதிராக நிமிர்ந்து பேசி, இந்தியாவின் நிலையை அழுத்தமாக எடுத்துரைத்திருக்கிறார். அனுபவமும் ஞானமும் மிக்க தலைவருடன் பேசியது, தம்மிடம் ஓர் ஆரோக்கியமான பாதிப்பை ஏற்படுத்தியுள்ளதாகக் கிளிண்டன் மனம் திறந்து பாராட்டியிருக்கிறார். அசலோ, 'பிராக்ஸி'யோ மக்கள் பிரதிநிதிகள் நம் பிரதமரின் பேச்சை இடிமுழக்கக் கைதட்டலுடன் வரவேற்றுள்ளனர். அமெரிக்கர்களுக்கு நம்மைப் பற்றிச் சந்தேகம் எழக் கூடிய விஷயங்களில் எல்லாம், நம் நிலையைத் தெளிவுபடுத்துவதில் வெற்றி பெற்றுள்ளார் ராவ். நம் நாட்டில் முதலீடு செய்வதா, வேண்டாமா என்று தயங்கிக் கொண்டிருந்த தொழிலதிபர்களுக்கு நம்பிக்கையூட்டியிருக்கிறார். 'பாதுகாப்புத் துறையில் இந்தியாவும் அமெரிக்காவும் சேர்ந்து சில பயிற்சிகளை நடத்தலாம்' என்ற திட்டம், எதிர்காலத்தில் பொருளாதார ரீதியிலும் இந்தியா – பாக். உறவு விஷயத்திலும் மகத்தான மாற்றங்களுக்கு அடிகோலக் கூடியது.

உலகத் தலைவர்களிடையே பேச்சு வார்த்தை என்பது உடனடியாகப் பலன் தந்து விடாது. அவரவர் தங்கள் கருத்துக்களை உடனே விட்டுக் கொடுத்து விடமாட்டார்கள். ராஜாஜி முன்பு கென்னடியைச் சந்தித்தபோது கூறியதுபோல், பூ விட்டிருக்கிறது; காயாகிப் பழம் கனியக் காத்திருக்க வேண்டும்.

## இடைத் தேர்தல் முடிவுகள்!

மயிலை, பெருந்துறைத் தேர்தல்களில் அ. தி. மு. க. வெற்றி பெற்று, ஜெயலலிதா தமது மகிழ்ச்சியையும் தெரிவித்து விட்டார். சற்று யோசித்துப் பார்த்தால் மொத்த வாக்காளர்களில் மிகப் பெரும்பான்மையினர் தமது ஆட்சியை எதிர்த்தே வோட்டுப் போட்டிருப்பதைப் புரிந்து கொண்டு, தவறுகளைத் திருத்திக் கொள்ளவும் அவருக்கு வாய்ப்புண்டு. ஆனால் வெற்றிப் பெருமிதத்தில் மிதப்பதானது ஜெயலலிதாவை அவ்வாறு சிந்திக்க அனுமதிக்காது!

இடைத்தேர்தல் என்பது ஆட்சியை மாற்றி அமைக்கப் போவதில்லை. நடக்கிற ஆட்சியில் மக்கள் திருப்தி அடைந்திருக்கிறார்களா, இல்லையா என்பதை எடை போட ஒரு சந்தர்ப்பம்; அவ்வளவே. எனவே, எதிர்க் கட்சிகள் தங்கள் சார்பாக ஒரே ஒரு வேட்பாளரை நிறுத்தியிருந்தால் நிலைமை தலைகீழாகி, ஆளும் கட்சிக்குப் பாடம் கற்பித்திருக்கும்; அடக்கம் பெறச் செய்திருக்கும். ஆனால் சிறிய அளவில் விட்டுக் கொடுத்து பெரிய நன்மையை அடைகிற புத்திசாலித்தனம் எதிர்க்கட்சிகளிடம் இல்லை. ஆளும் கட்சிக்கு ஆணவம் அதிரிக்கவே வழி வகுத்து விட்டார்கள். மு.க.வா, வை.கோ.வா என்ற கேள்விக்கு மயிலையில் விடை கிடைத்திருக்கிறது. தாணு டெபாசிட் இழந்தார். பெருந்துறையில் தி.மு.க நேரடியாகப் போட்டியிடாதபோது அடுத்ததாக உள்ள திராவிட பாரம்பரிய கட்சிக்கு மக்கள் கணிசமான வோட்டுகளை வழங்கியதில் வியப்பில்லை. தி.மு.க. பிளவு படாமலிருந்தால், ஜெ.யின் கோட்டை கைப்பற்றப்படா விட்டாலும் விரிசல் விழுந்திருக்கும். சக்தி வாய்ந்த ஒரே எதிர்க்கட்சியையும் உடைத்ததில் வை.கோ. என்ன சாதித்தார்? ஜனநாயகத்துக்கு ஊறு விளைவித்தார். அவ்வளவே.

காங்கிரஸ், நாட்டின் வேறு பல இடங்களில் சிறிதும் பெரிதுமான வெற்றிகளைக் கண்டிருந்த போதிலும் தமிழகத்தில் இருந்த இடம் தெரியவில்லை. குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டாத கதையாக ஊழல் கூப்பாடு எழுப்பி, தர்ணா நடத்திச் சமாளிக்கிறது. இதைக் காட்டிலும் தோல்வியை ஏற்று அலசி ஆராய்ந்தால், உட் கட்சிப் பூசலும் மக்களிடமிருந்து விலகியிருப்பதும்தான் காரணங்கள் என்று புரிந்து கொள்ளலாம்.

இடைத் தேர்தல் முடிவுகள் மீண்டும் இருகட்சி ஜனநாயகத்தின் அவசியத்தையே வலியுறுத்துகின்றன. இதற்கு அனுகூலமாகத் தலைவர்கள் தமக்குள் செயல்படுவதுடன், தேர்தல் சட்டங்களையும் திருத்தி அமைக்க முன் வராதபோது இங்கு ஜனநாயகம் அல்ல; அபத்த நாயகம்தான் நடக்கும்.

# மீண்டும் மனோகர்!

இனி நாடகம் போடுவதில்லை என்று தமது உடல் நிலை காரணமாக முடிவெடுத்திருந்த ஆர். எஸ். மனோகர் தற்போது அந்த முடிவை மாற்றிக் கொண்டிருக்கிறார். போடப் போகும் நாடகம் திருநாவுக்கரசர்.

"இப்போதைய என் வயதுக்கேற்ற கதாபாத்திரம். இது தவிர விஸ்வாமித்திரர், சாணக்கிய சபதம் ஆகிய இரு நாடகங்களையும் போடப் போகிறேன். திருநாவுக்கரசர் நாடகத்தில் பத்துப் பாடல்களும் இடம் பெறுகின்றன. இசை: குன்னக்குடி. இது ஒரு டிராமாஸ்கோப் தயாரிப்பு."

"அது என்ன டிராமாஸ்கோப்?"

" சினிமாஸ்கோப் போல, மேடையில் டிராமாஸ்கோப். 38 அடி அகல மேடை. அதில் பிரமாண்டமான செட். அரண் மனைக் காட்சி என்றால், மேடையின் மேற்புறம் கூட, ஓர் அரண்மனை போன்று தோற்றமளிக்கும்!"

"மனோகர் நாடகங்கள் என்றாலே, தந்திரக் காட்சிகள் வெகு பிரபலமாயிற்றே! திருநாவுக்கரசர் நாடகத்தில் அது போல ஏதாவது...?"

"நிறைய உண்டு. மதம் பிடித்த யானை ஒன்று மேடையில் தோன்றும். அதை அடக்கும் காட்சி; திருநாவுக்கரசரைக் கல் லில் கட்டித் தண்ணீரில் எறிய, அந்தக் கல்லைத் தெப்பமாய் மாற்றி அவர் மேலே வந்து மிதக்கும் காட்சி; திருவையாற்றில் இருந்து கொண்டு, கைலாயத்தைத் தரிசிக்கும் காட்சி, கண் ணாம்புக் காளவாய் தீப்பற்றி எரியும் காட்சி போன்ற தந்திரக் காட்சிகள் ரசிகர்களைப் பிரமிப்பில் ஆழ்த்தும். கதை நிகழும் சிதம்பரம், வேதாரண்யம், சீர்காழி, திருவீழி மிழலை, திங்களூர், திருவையாறு போன்ற இடங்களில் உள்ள கோவில்களின் செட்களும் நாடகத்தில் இடம் பெறும். சபாக்களை மட்டுமே நம்பியிருக்காமல், இந்த நாடகத்தைக் கோவில் புனரமைப்பு நிதி சேகரிப்பு நிகழ்ச்சியாக நடத்தித்தரும் திட்டமும் வைத்திருக்கிறார் மனோகர்.

இப்போது உடல் நிலை எப்படி இருக்கிறது?

"ஜனவரியில் காலில் ஓர் அறுவைச் சிகிச்சை செய்து கொண்டேன். இரண்டு கால்களுக்கும் இப்போது நீளத்தில் அரை அங்குலம் வித்தியாசம். அதைச் சரி செய்ய, டாக்டர் அறிவுரைப்படி, தினமும் கடுமையான உடற்பயிற்சிகள் செய்து கொண்டிருக்கிறேன்."

எப்போது அரங்கேற்றம்? சி.எம்.தேதி கொடுத்ததும்!

இன்னொரு செய்தி: மனோகரின் புராண, வரலாற்று நாடகங்கள் அனைத் தையும் வீடியோவில் பதிவு செய்து பாது காக்கப் போகிறதாம் தமிழக அரசு.

சந்திப்பு: **எஸ்.சந்திரமௌலி**

• திருநாவுக்கரசராக...





# டூயட்

பிழியப் பிழிய லவ். பிரபு - மீனாட்சி, ரமேஷ் அரவிந்த் - மீனாட்சி, வில்லன் - மீனாட்சி, கிளைமாக்ஸில் ஒரு வழியாக மீனாட்சி - பிரபு என்று கிட்டத் தட்ட ஒரு லவ்வோத்ஸவ் நடத்தியிருக்கிறார், பாலசந்தர்.

'பீகாரில் வெள்ளம்' என்று ஃபிலிம் டிவிஷன் படத்தில் ஒரு ஐஎஸ்.ஐ. குரல் கேட்குமே, அந்த ரீதியில் படம் ஆரம் பித்த ஐந்து நிமிடங்களுக்கு ஒரு அநாம தேயக் குரல் காலட்சேபம் செய்ய, ஏதடா இது பாலசந்தர் படமா, எஃப்டியின் காதல் பற்றின டாகுமெண்டரியா என்ற சந்தேகம் எழுவது தவிர்க்கும்படி இல்லை.

ஆனால் தொடர்வதான காட்சிகளில் ஸாக்ஸஃபோன் கலைஞராகப் பிரபுவும் சினிமா டான்ஸ் மாஸ்டராக மீனாட்சி (சேஷாத்ரி)யும், அடுத்தடுத்து அறிமுகமாகி, ஒருவித அருண் ஐஸ்க்ரீம் தன்மையை ஸ்க்ரீன் முழுதும் வியாபிக்க வைக்கிறார் கினோ - அங்கே பிடிக்கிறது சூடு - ஸாரி - குளுகுளு!

நமக்கென்னவோ, ஹீரோ, பிரபு என்று தோன்றவில்லை. கதிரி கோபால் நாத்! அது என்ன வாத்தியம்! கொஞ்சம் புல்லாங்குழல், கொஞ்சம் கிளாரினெட், கொஞ்சம் நாதஸ்வரம் என்று கலந்தடித்து, காதில் நுழைந்து, நரம்புகளைச் சுண்டி., ரத்தத்தில் கொப்பளிப்பு ஏற்படுத்தும் அப்படி ஒரு வாசிப்பு! விவரிக்க முடியாத இப்படியொரு தேனிசை மழை வேறெந்த தமிழ் சினிமாவிலும் இது வரை சாத்தியமாகியிருக்கிறதா தெரியவில்லை. உடனே தில்லானா மோகனாம்பாள் இல்லையா, அது இல்லையா, இது இல்லையா என்று துடித்தெழும்' அன்பர்கள் முதற்கண் ஒருதரம் இப்படம் பார்த்து வாருங்கள். அட்லீஸ்ட், ஆடியோ கேஸட்.

பிரபு ரசிகர்களைத் திருப்திப்படுத்த(?) செந்தில் காமெடி. கடவுளே, மறுபடி வாழைப்பழம்! You too K. B?

அதுதான் போகட்டுமென்றால், அமீர்ஜானை இயக்க வைத்து (ஸெகண்ட் யூனிட்டாம்) ஓரிரு சண்டைக்காட்சிகள். அலிபாபாவும் நாற்பது திருடர்களும் பாணியில் டிரம் உருட்டல் கிளைமாக்ஸ். கமர்ஷியல் காம்ப்ரமைஸஸ் என்று கே.பி. சொல்லலாம். கறுப்புப் புள்ளிகள் என்று நாம் சொல்லுவோம்.

இரண்டு பேரைத் திகட்டத் திகட்டப் பாராட்ட வேண்டும். ஆர்ட் டைரக்டர் சலமையும், கேமராக்காரர் ரெட்டியையும். விசாகப்பட்டினத்தை அநியாயத்துக்குக் கொள்ளை அடித்திருக்கிறார்கள். குறிப்பாக அந்த 'வெண்ணிலாவின்...' பாடல் சமயம்.

படம் கொஞ்சம் 'ஜவ்'வென்றாலும் 'லவ்'வென்பதால் ரசிக்க முடிகிறது.

- ஆர். பி. ஆர்.



## பரிசு ரூ.250

# இதோ ஒரு ஸ்டேட்மெண்ட்!

உருக்கமான - கவித்துவம் ததும்பும் - நெருப்புச் சுவைமிக்க - நெஞ்சு கனக்கச் செய்யும் ஸ்டேட்மெண்ட்கள் விடுவதில் நம் அரசியல்வாதிகளை அடித்துக் கொள்ள ஆள் கிடையாது. அதுவும் குறிப்பாக, ஏதாவது கட்சியிலிருந்து விலக்கப் பட்டாலோ – ஊழல் புகார் சுமத்தப்பட்டாலோ அந்த ஸ்டேட்மெண்ட்களின் வீரியம் எக்கச்சக்கமாக உயர்ந்துவிடும்.

அரசியல்வாதிகள் மட்டும் என்ன ஸ்டேட்மெண்ட் விடுவது? ஒரு சேஞ்சுக்கு, இந்த வாரப் போட்டிக்காக நீங்கள் ஒரு ஸ்டேட்மெண்ட் விடுங்கள்.

மனசுக்குள் உங்களை ஒரு ஒன்ணாங்கிளாஸ் அரசியல்வாதியாகக் கற்பனை செய்து கொண்டு, உங்கள் மீது சுமத்தப்பட்டிருக்கும் ஊழல் குற்றச்சாட்டில் உண்மை ஒரு பர்செண்ட் கூட இல்லை (இருக்க முடியுமா என்ன!) என்பதை விளக்கி கீழேயுள்ள வெற்றிடத்தில் உங்கள் ரத்தத்தின் ரத்தமான, உயிரின் உயிரான, உடம்பின் உடம்பான, நரம்பின் நரம்பான தொண்டர்களுக்கு ஒரு ஸ்டேட்மெண்ட் விடுங்கள். (கொஞ்சம் தமாஷா இருக்கட்டுங்க!)

ஒரே கண்டிஷன் – உங்கள் ஸ்டேட்மெண்ட் பத்துவரிகளுக்கு மிகாமல் இருக்கட்டும். (இடம் போதாதுங்க!) ரூ. 250/- பரிசு. தவிர, 'ஸ்டேட்மெண்ட் சிகாமணி' என்றொரு பட்டம். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**முடிவு தேதி: 8.6.94.**

உறையின் மேல் **'இதோ ஒரு ஸ்டேட்மெண்ட்'** என்று குறிப்பிடுங்கள்.

என் பெயர் :..........................................................

விலாசம் :..........................................................

..........................................................



SBF

# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்டு லிமிடெட்

**பதிவு அலுவலகம் :- 8, கற்பகாம்பாள் நகர், லஸ்**
**மைலாப்பூர், சென்னை - 600 004 போன் : 4993241/4990953**
**கிளை அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு,**
**பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை - 600 003**
**போன் : 563055**

**ரொக்க நடவடிக்கை : காலை 8:30 முதல் மாலை 5:30 வரை**
**ஞாயிறு காலை 8:30 முதல் பகல் 12:30 வரை**
**வரவு செலவுகள் அங்கத்தினர்களுடன் மட்டுமே**
**(வெள்ளிக் கிழமை விடுமுறை)**

## கடன்

நகைகள் பேரில் கிராம் 10க்கு ரூ. 3000/- வழங்கப்படும்.
சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும்.

## இயக்குநர்கள் :

| பெயர் : | விலாசம் : |
|---|---|
| திரு T. V. சீனிவாசன் | 15, லஸ் அவின்யூ, சென்னை - 4. |
| திரு P. K. சந்திரசேகரன் | 89, போயஸ் கார்டன், சென்னை 86 |
| திரு ப்ரவின் கோவிந்தராவ் | 22, போயஸ் கார்டன் சென்னை 86 |
| திருமதி P. C. சுந்தரவதனி | சுந்தரவதனி கல்யாண மண்டபம் எழும்பூர், சென்னை 7- ✆ 8261078 |
| திரு P. K. C. ரமேஷ் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு D. தனுஷ்கோடி | 21/1A, பழைய குயவர்பாளையம் ரோடு, மதுரை - 625 009 |
| திரு P. C. பாஸ்கர் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு K. R. நிரஞ்சன் குமார் | 1, பின்னி ரோடு, சென்னை - 86 |
| திரு P. C. சியாம் சுந்தர் | 89, போயஸ் கார்டன், சென்னை - 86 |
| திரு K. G. கிருஷ்ணன் | Y-210, 2வது அவென்யூ, அண்ணா நகர், சென்னை - 40. |

**OUR VALUED DEPOSITOR**



Sri K. G. Appusamy
Ex. Chairman &
Managing Director –
AIR INDIA

**சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும்**



• கருடகம்பம், ராஜகோபுரம்

# நிலமகளை மீட்ட நெடுமால்!

**பூ**மி தேவிக்கு ஆபத்து என்பது புராண காலங்களிலேயே ஏற்பட்டிருக்கிறது. ஹிரண்யாட்சன் என்கிற அசுரன் பூதேவியைச் சிறைப் பிடித்துக் கொண்டு போய்க் கடலுக்குள் பதுக்கி வைத்துவிடுகிறான். திருமால் வராக உருவெடுத்துப் போய் பூதேவியை மீட்டு வருகிறார் என்பது புராண வரலாறு.

தென்னாற்காடு மாவட்டத்தில் சிதம்பரம், விருத்தாசலத்துக்கு அருகில் உள்ள வைணவத் திருப்பதியான ஸ்ரீமுஷ்ணத்தில் சேவை சாதித்து வருகிறார், பூவராக சுவாமி. அற்புதமான சாளக்கிராம வடிவத்தில் இரண்டரை அடி உயரத்தில் பளபளக்கும் முகப் பொலிவோடு இடுப்பில் கைவைத்தவாறு நிற்கும் 'சுயம்பு' வடிவம் இவர்.

பெருமாளின் முகம் மட்டும் வராகம். தெற்கு நோக்கியவாறு திரும்பியிருக்கிறார். சற்றே மேலே முகத்தை உயர்த்தியவாறு காட்சி தருகிறார். ஹிரண்யாட்சன் இறந்த போது அவனுடைய பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து, அவன் உயிர் விட்ட திசையையே பார்த்தவாறு அருள் பாலிக்கிறார்.

தாமே உருவான மூலவர் என்பதால் இது 'ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரம்' என வழங்கப்படுகிறது. பூமிதேவியின் (ஸ்ரீ) கரம் பற்றி மீட்டதால் (முஷ்ணம்) ஊர்ப் பெயர் வடமொழியில் அமைந்தது. இலக்கியங்களில் 'திரு முட்டம்' என்று வழங்கப்பட்ட பழம் பெருமை வாய்ந்த தலம் இது.

**மே**ற்கு நோக்கிய நுழைவாயில். கம்பீரமான ராஜ கோபுரம். அதைவிட ஒரே கல்லில் வடிக்கப்பட்டு நெடிதுயர்ந்து நிற்கும் கருடகம்பம் அழகின் உச்சம்! அடிப்பகுதியில் இருபுறமும் ஆஞ்சநேயரும் கருடனும் வடிக்கப்பட்டிருக்கிறார்கள். அதை அடுத்து நாலு கால் மண்டபம். பெருமாள், இந்த மண்டபத்தில் எழுந்தருளிப் பிரபந்தங்கள் சொல்லப்பட்ட பிறகுதான் வீதியுலாவுக்குப் புறப்படுவார்.

ராஜகோபுரத்தின் வழியே உள்ளே நுழைந்ததும் இடப்புறம் இரண்டு பாதங்கள் சற்றுப் பெரிய அளவில் கண்களில் படும். அதையொட்டி இருபது முப்பது படிகள் மேலே ஏறினால் கோபுரத்தின் அடிப்பகுதிப் புழை ஒன்றில் கிழக்கு முகமாக ஸ்ரீநிவாசப் பெருமாள், ஆஞ்சநேயருடன் காட்சி தருவார். இவர்களைத் தரிசித்துத்தான் ஆலய வழிபாட்டைத் தொடங்க வேண்டும். படியேறி மேலே செல்ல இயலாதவர்கள் கீழே விளங்கும் திருப்பாத தரிசனத்தோடு தொடங்கலாம்.

பலி பீடத்துக்கு இடப்புறம் உடையவருக்கும் ஆண்டாளுக்கும் தனித் தனியே சந்நிதி, சுவாமியின் திருவுருவத்துக்கு எதிரில், நின்ற நிலையில் கருடாழ்வார் அருள்பாலிக்கிறார். இவருக்கும் கருவறைக்கும் இடையேயுள்ள பதினாறு கால் மண்டபம் கலை ஆர்வலர்களைக் கட்டிப் பிணிக்கும் அழகுடையது. பதினாறு பிரிவுகளைக் கொண்டது 'புருஷஸூக்தம்'. அதனால் இதற்குப் புருஷஸூக்த மண்டபம் என்று பெயர்.

மையப் பகுதியில் நான்கு தூண்களில் ஆலயத்தை நிர்மாணித்தவர்களான நாயக்க மன்னர்களின் சிலைகள் பிரமிப்பூட்டும் கலையழகு கொண்டவை. ஒரே கல்லில் தலைவன், தலைவி, குழந்தைகள் என்று குடும்பம்

குடும்பமாக அமைத்திருக் கிறார்கள். இந்தச் சிலைகளில் பெண்களின் விதம்விதமான கூந்தல் ஒப்பனைகள் நுட்பம் மிருந்த கலைத்திறனுக்கு எடுத்துக்காட்டு. ராக்கொடி, திருகுவில்லை போன்றவை கல்லில் வடிக்கப்பட்டவை என்று சொல்ல முடியாத அழகு!

• பதினாறுகால் மண்டபத்தில் அச்சுதப்ப நாயக்கர், குடும்பத்தோடு....



**ம**ண்டபத்திலேயே நின்றுவிட்டால் எப்படி? உள்ளே வரலாம்.

துவாரபாலகர்களாய்ச் செப்புத் திரு உருவங்களாக ஜயர், விஜயர் என்று ஆளுயரத்துக்கு மேல் நல்ல ஆகிருதியோடு இங்கு உண்டு. இவர்களில் விஜயர் 'காணாமல்' போய் மரத்தால் செய்து வைத்திருக்கிறார்கள். ஜயர் திருவுருவம் கண்டானந்திக்க வேண்டிய ஒன்று.

**நெ**ய்வேலியை அடுத்த வளையமாதேவி என்னும் ஊரில் பெண்ணெடுத்தவர் பூவராகர். காத்தியாயன மகரிஷி என்பவர் இயற்றிய யக்ஞத்தில் தோன்றி யக்ஞ வராஹர் என்று பெயர் பெற்று, மகரிஷியின் பெண்ணான அம்புஜவல்லியையே கரம் பற்றியவர். தாயார் சந்நிதியில், உற்சவத் திருமேனியாக விளங்குகிறவர் கஜலக்ஷ்மி.

அம்புஜவல்லித் தாயார் வளையமாதேவியை விட்டுப் புக்கம் வந்தபோது, கூடவே தோழியரையும் அழைத்து வந்துவிட்டாள். குழந்தையம்மன் என்று பொதுவாக வழங்கப்படும் இந்த சப்த கன்னிகைகளுக்கும் காப்புக் கட்டித் திருவிழா தொடங்கி விட்டால் பத்து நாட்களுக்குப் பெருமாளுக்கு எந்த விதமான உற்சவமும் கிடையாது. மனைவியின் தோழியர் என்றால் சும்மாவா?

பூவராகன் சந்நிதிக்கு வெளியேதான் உற்சவத்திருமேனிகள். பெருமாள் ஒருவர்தான் உள்ளே இருப்பார். 'ஏக பேரம்' என்கிற இந்த முறை ஸ்ரீமுஷ்ணம் ஆலயத்தில் மட்டும்தான் என்கிறார்கள்.

உற்சவரின் திருநாமம் யக்ஞவராகர் என்பது. இவருக்கு அருகிலேயே சிறு குழந்தை வடிவில் சந்தான கோபாலனின் திருமேனியையும் காணலாம். இந்தக் 'குழந்தை'யை பால் அபிஷேகம் செய்து மடியிலிருத்தி வழிபடலாம். குழந்தைத் திருமேனி பார்த்த மாத்திரத்தில் கைகால்களை உதைத்துக் கொண்டு புன்னகைக்கிற மாதிரி ஒரு பிரமையை உண்டாக்கும். பிள்ளைப்பேறு நல்கும் சந்தான கோபாலன் இவர்.

உற்சவர் ஆண்டுக்குப் பதினைந்து நாள் சுற்றுலாப் போய் விடுவார். மாசி மகத்துக்குக் கிள்ளை என்கிற சிற்றூரில் தீர்த்தவாரி வழங்கி விட்டுச் சாவகாசமாக ஊர்திரும்பும் போது, ஊர் எல்லையில் தெத்துப் பிள்ளையார் கோவில் வாய்க்கால் கரையில் மாலை மரியாதை வாண வேடிக்கைகளுடன் ஊர் மக்கள் சுவாமியை வரவேற்கும் வைபவம் இன்றளவும் சிறப்புற நிகழ்கிறது. கிள்ளை கிராமத்தில் உள்ள முஸ்லிம் தர்க்கா எதிரில் இந்தப் பெருமாளுக்கு மரியாதைகள் நடைபெறுவது 'பாப்ரி மசூதி' நாட்களிலும் நிகழும் ஓர் அற்புதம்.

படங்கள் : **யெஸ்பால்**

**கமலமனராஜன்**

# வல்லமை தாராயோ!

“கணேஷ்...!” கல்யாணியின் குரல்.

அவன் சமையலறைக்குப் போனான். கேசரி மணத்தது.

“என்னம்மா?”

“உங்கப்பா பூ மட்டும் வாங்கிட்டு வர மறந்துட்டார். ஒரு நடை போய் வாங்கிட்டு வந்துடேன்.”

“அதுக்குச் சிந்தாமணி போகணுமேம்மா.”

“என்ன பண்றது? வெறுந்தலையா ரம்யாவை நிறுத்த முடியுமா?”

கணேஷ் கிளம்பினான். சென்ற வாரம் அவனுடைய தங்கை ரம்யாவைப் பெண் பார்த்து விட்டுப் போயிருந்தார்கள். பையனுக்கும் அவனது பெற்றோர்களுக்கும் அவளைப் பிடித்து விட பணம் நகை சீர்வரிசை எல்லாம் பேசி முடிவாயிற்று. இன்று பையனின் அக்காவும் அவளின் கணவனும் வருகிறார்கள்.

டவுன் பஸ் வந்தது. கணேஷ் ஏறிக் கொண்டான்.

டிக்கெட்டை வாங்கி பாக்கெட்டில் செருகியவனின் பார்வையில் அந்தக் காட்சி பட்டது. முன்னால் நின்றிருந்த மனிதரின் ஜிப்பாவில் துருத்திக் கொண்டிருந்த பர்ஸை ஒருவன் லாகவமாய் உருவினான். கணேஷ் முன்னேறி அவனைப் பிடித்துக் கன்னத்தில் அறைந்தான்.

“பர்ஸை எடுடா!”

“எந்த பர்ஸ்?”

அதற்குள் அந்த மனிதர் ஜிப்பாவைத் தொட்டுப் பார்த்து அலறினார்.

“பெரியவரே...இவன்தான் திருடிட்டான். என்னடா முழிக்கிற? எடு....”

பேருந்து நின்றது. அவன் பர்ஸை எடுத்துத் தந்தான்.

“இந்தாங்க பெரியவரே. பத்திரமா வைச்சிக்குங்க. கண்டக்டர் பஸ்ஸை போலீஸ் ஸ்டேஷனுக்கு விடச் சொல்லுங்க. இவனை ஹேண்ட் ஓவர் பண்ணிடலாம்” என்றான் கணேஷ். அதுவரை அமைதியாயிருந்த சக பிரயாணிகள் சலசலத்தார்கள்.”

“சக...அங்க போனா லேட்டாயிடும்.”

“ஆமா...”

“அதான் பர்ஸை திருப்பிக் குடுத்துட்டானே. பேசாம விட்டுடலாம்.”

“ம்ஹூம். இவனை மாதிரி ஆளுங்களை சும்மா விட்டுடக் கூடாது. ட்ரைவர் சார், வண்டியைத் திருப்புங்க... கணேஷ் உறுதியான குரலில் சொன்னான்.”

பேருந்து போலீஸ் ஸ்டேஷனை அடைந்தது. அவனை ஒப்படைத்து விட்டு ரிப்போர்ட்டும் எழுதிக் கொடுத்து விட்டு, கணேஷ் சிந்தாமணிக்குப் போய் பூ வாங்கிக் கொண்டு வீடு திரும்பிய பொழுது அவர்கள் வந்திருந்தார்கள். பின்வாசல் வழியாக சமையலறைக்குச் சென்றான்.

“ஏன் இவ்வளவு நேரம்?” என்றாள் கல்யாணி.

சொன்னான்.

“நமக்கென்னன்னு சும்மா இருக்க மாட்டியே... சரி சரி... முன்னால போய் அவங்களோட உட்கார்.”

வெளியே வந்தான்.

“இது என்னோட பையன் கணேஷ்!” என்றார் ராமச்சந்திரன்.

“நமஸ்காரம்!” கை கூப்பினான்

சிறிது நேரத்தில் மிதமான அலங்காரத்துடன் ரம்யா வந்தாள். டிபன் காப்பி முடிந்ததும் “ஒரு முக்கியமான விஷயம்!” என்று ஆரம்பித்தாள் பையனின் அக்கா.

“என்னங்க?”

“என் தம்பிக்கு ஸ்கூட்டர் ஒண்ணு வேணுமாம். அதையும் லிஸ்ட்லே சேர்த்துக்கச் சொன்னான்.”

“அன்னைக்கே எல்லாம் பேசி முடிவாயிடுச்சே. இப்ப திடீர்னு...”சற்று வேகமாகப் பேசத் தொடங்கிய கணேஷை கையமர்த்திவிட்டு ராமசந்திரன் “சரி... வாங்கிக் கொடுத்துடறோம்!” என்றார்.

“உங்க பையன் என்னவோ சொல்ல வந்தாரே...”

"ஒண்ணுமில்ல. அவன் கிடக்கறான்."

"நீங்க சும்மாயிருங்க. ஏற்கெனவே நிறைய கடன் வாங்கித்தான் செய்யற நிலையிலிருக் கோம். இதுல நீங்க பாட்டுக்கு நினைச்சு நினைச்சுக் கேட்டா என்ன பண்றது?"

"ஊர் உலகத்தில யாரும் கேட்காததையா கேட்கறோம்-! என் தம்பிக்கு இன்னும் அதி கமா சீர் வரிசை செய்து பொண்ணு கொடுக்கத் தயாரா இருக்காங்க."

"அப்ப அங்கயே போய் பொண்ணை எடுத்துக்குங்க."

"கணேஷ்....!" என்றார் ராமசந்திரன் பதறி.

"இனிமே கார் வாங்கித் தந்தாலும் கூட உங்க பொண்ணு வேண்டாம் எங்களுக்கு!" என்று விருட்டென எழுந்தார்கள்.

ராமசந்திரனும், கல்யாணியும் மன்னிப் புக் கேட்டும், சமாதானம் சொல்லியும் பயனில்லை.

"போதுமாடா... உனக்கு இப்ப திருப்தியா? உன் கோபத்தை எந்தெந்த விஷயத்தில காட்டணுங்கிற விவஸ்தையேயில்லையா?"

"பின்னே என்னப்பா? மாப்பிள்ளை வீட்டுக்காரங்கன்னா ஏதோ கொம்பு முளைச்சவங்க மாதிரி இஷ்டத்துக்கு டிமாண்ட் பண்ணணுமா?"

"இதெல்லாம் சகஜம். நாமதான் தாழ்ந்து போகணும். என்ஜினியர் மாப்பிள்ளை. நல்ல இடம்."

"இப்படிச் சொல்லியேதான் சீரழியறோம். கொஞ்சமாவது தன்மானத்தோட இருக் கணும்பா."

"இனிமே இவளுக்கு வர்ற ஒவ்வொரு வரனையும் இந்த மாதிரி விரட்டிரு."

"சந்தோஷமா இருக்கும்!" என்றாள் கல் யாணி கண்ணீருடன்.

"ரம்யாவுக்குக் கல்யாணம் முடியற வரைக்கும் நீ எதிலேயும் தலையிட வேண் டாம்."

கணேஷிற்கு வெறுப்பாயிருந்தது.

செருப்பை மாட்டிக் கொண்டு வெளி யேறிக் கால்போன போக்கில் நடந்தான். மனம் அலை பாய்ந்தது.

'அவசரப்பட்டு விட்டேனோ? சற்றுப் பொறுமையா இருந்திருந்தால் ரம்யாவிற்கு இந்த இடமே அமைந்திருக்கும்.'

'நோ. இது இல்லாவிட்டால் இன்னொரு இடம். அதற்காக அவர்கள் சொல்வதற் கெல்லாம் தலையாட்ட வேண்டுமா என்ன?'



யோசித்துப் பார்த்ததில், தான் நடந்து கொண்ட விதம் சரியானதாகவே பட்டது அவனுக்கு.

அப்பொழுது கணேஷ் அவனைப் பார்த்தான். சற்று முன்னால் போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைக்கப்பட்டவன். அவன் கணேஷை நெருங்கி எகத்தாளமாகச் சிரித்தான்.

"என்னவோ போலீஸ்ல விட்டுட்டா என்னை உள்ள தள்ளிடுவாங்கன்னு நீ நினைச்சியா? இன்ஸ்பெக்டரை கவனிக்க வேண்டிய விதத்தில கவனிச்சேன். வெளிய வந்துட்டேன்."

அதே சிரிப்புடன் சொல்லிவிட்டு அவன் அகல, கணேஷிற்குள் உணர்ச்சிகள் வெடித்தன. திரும்பவும் போலீஸ் ஸ்டேஷன் சென்றான்.

"வாங்க!" என்றார் இன்ஸ்பெக்டர்.

"பிக்பாக்கெட் அடிச்ச ஒருத்தனக் கொஞ்ச நேரத்துக்கு முன்னால கொண்டு வந்து ஒப்படைச்சேனே. என்ன சார் ஆக்ஷன் எடுத்தீங்க?" என்றான் நேரடியாய்.

"ரிப்போர்ட் எழுதிக் கொடுத்தீங்க, இல்ல. அதோட விட்டுடுங்க. என்ன ஆக்ஷன் எடுக்கணும்னு எங்களுக்குத் தெரியும்."

"ஸ்டாப் இட்! அவன்கிட்டயிருந்து லஞ்சப் பணம் வாங்கிக்கிட்டு சும்மா விட்டுட்டீங்க. நீங்களே இப்படிப் பண்ணினா சமுதாயம் எப்படி உருப்படும்?"

"மிஸ்டர்.... மைண்ட் யுவர் வேர்ட்ஸ். மேல ஏதாவது பேசினீங்கன்னா உங்களைப் பிடிச்சி உள்ளே தள்ளிடுவேன்."

"தள்ளுங்க பார்க்கலாம்....!" கணேஷ் கை நீட்டி ஆவேசமாகப் பேசினான்.

இன்ஸ்பெக்டர் எழுந்து அவனது சட்டையைப் பற்றினார். "போர் நாட் ரீ. இங்கே வாய்யா. இந்தாளை லாக் - அப்புல தள்ளு. அப்பதான் புத்தி வரும்."

கணேஷிற்கு கோபம் கொப்பளித்தது.

"காரணமில்லாம ஒருத்தரை அரெஸ்ட் பண்ண முடியாது."

"ஸ்டேஷன் வந்து என்கிட்ட சட்டத்துக்குப் புறம்பா பேசினதா கேஸ் புக் பண்ணிடறேன்" என்றார் இன்ஸ்பெக்டர்.

**வீ**டு மகா அமைதியாயிருந்தது. கவலை முகத்துடன் கல்யாணி, ரம்யா. கணேஷ் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான். எதிரே ராமசந்திரன். அப்பொழுதுதான் அவனை ஜாமீனில் அழைத்து வந்திருந்தார்.

"வீட்லதான் உன் குணத்தைக் காட்டறேன்னு நினைச்சா...வெளியிலேயுமா? ஸ்டேஷன் வரைக்கும் வந்து... எத்தனை அவமானம் உன்னால?"

"லஞ்சம் வாங்கிக்கிட்டு அந்த இன்ஸ்பெக்டர் தப்பு செஞ்சவனைத் தண்டிக்காம விட்டுட்டார். அதைக் கேட்கப் போனேன். அவ்வளவுதான்..."

"உலகத்தில் தினம் எவ்வளவோ அநியாயம் நடக்குது. நீ ஒருத்தன் எதிர்த்து நின்று சாதிக்கப் போறியா?"

மௌனமாய் நின்றான்.

"என்னதான் உன் தேவை? இந்தச் சமுதாயத்தைத் திருத்தணுமா?"

அவன் திடீரென உடைந்தான்.

"இல்லேப்பா. இப்ப என்னோட தேவையெல்லாம் அக்கிரமத்தைக் கண்டு சீறியெழாத மனசு, மத்தவங்க போல எல்லாத்தையும் சகிச்சிக்கிட்டு குட்டக் குட்ட குனிஞ்சு தாங்கிக்கிற பொறுமை, யாரு எக்கேடு கெட்டுப் போனா என்ன நம்ம வரைக்கும் நாம சந்தோஷமா வாழ்ந்தா போதுங்கிற சுயநலம்...இதுதான் இந்தக் கணம் எனக்கு வேணும். அதை ஆண்டவன் கொடுத்தாப் போதும்..." சொல்லிவிட்டு மடியில் முகம் புதைத்து கணேஷ் அழத் தொடங்க, அவனைப் பார்த்து ஆத்திரப்படுவதா இல்லை பரிதாபப் படுவதா எனப் புரியாமல் நின்றார் ராமசந்திரன்.

---



**வ**ன்முறைக் கூட்டத்தைக் கலைக்கக் கண்ணீர்ப் புகையும், தடியடியும் பயனற்றுப் போகும்போது, துப்பாக்கி சூடு நடத்தினால், அதனால் அப்பாவிகளே உயிரிழக்கின்றனர்; ஆட்சியாளர்கள் பழி சுமக்கவே நேர்கிறது. இச்சங்கடத்திலிருந்து மீள ஜப்பானிய போலீசார் இரு நவீன உத்திகளைப் பயன் படுத்துகின்றனர். ஒரு இயந்திரம் சோப்புநீர் போன்ற திரவத்தை வேகமாகத் தரையில் பாய்ச்சுகிறது. கூட்டத்தினர் அடியெடுத்து வைக்கும்போதெல்லாம் வழுக்கி விழுந்து நிலைகுலைந்து போகிறார்கள். மற்றொரு குழல் வழியே ஒரு பழுப்பு நிறத் திரவம் பீய்ச்சி அடிக்கப்படுகிறது. அது உடலில் ஏற்படுத்தும் கறைகளைப் பல நாட்களுக்கு இலேசில் அழிக்கமுடியாது. போலீசார் அடுத்து வரும் நாட்களில் அவர்களைத் தனித்தனியே அடையாளம் கண்டு கைது செய்ய முடிகிறது.

– அ. ஷண்முகசுந்தரம்

# குடும்பத் தலைவிகளே! உங்களில் பலருக்கு விரைவாக வளர்ந்து பெருகும் ஒரு டெபாசிட் திட்டம் அவசியம் என்பது தெரியுமா?



அதனால்தான் தொழில் முறையில் ஒரு நிதி நிறுவனத்தை நிர்வகித்துச் சிறந்த அனுபவம் பெற்றுள்ள நாங்கள் சுபநிதியைத் தொடங்கியிருக்கிறோம். விரைவாக வளர்ந்து பெருகும் இரண்டு வாய்ப்புகளை இந்த டெபாசிட் திட்டம் உங்களுக்கு அளிக்கிறது. நீங்கள் ரூ.6,000/-, ரூ.10,000/- ஆகிய தொகைகளை டெபாசிட் செய்யும்போது ஏழே ஆண்டுகளில் அவை முறையே ரூ.22,100/- ஆகவும், ரூ.36,780/- ஆகவும் பெருகி விடுகின்றன. இன்றே எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். உங்களுடைய பல்வேறு பிரச்னைகளை நீங்கள் மிக எளிதாகச் சமாளித்துவிட முடியும் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.




எக்சிக்யூட்டிவ் பிரசிடெண்ட் : P.G. சரண்யன், முன்னாள் தலைவர், கரூர் வைஸ்யா பாங்க் லிட்.




**RPS BENEFIT FUND LTD**
(Declared as "NIDHI" by the Central Government)

**தலைமை அலுவலகம்:** 16, இராமநாதன் தெரு, தி. நகர், சென்னை-17. போன்: 441554, 441346.

**கிளைகள்:** இராயபுரம் (சென்னை) போன்: 556164, கோயம்புத்தூர் - போன்: 43576, பெங்களூர் - போன்: 366433, பாண்டிச்சேரி - போன்: 31659.

உறுப்பினர்களுக்கு மட்டும்.

**பாதுகாப்பான வழியில் விரைவான வளர்ச்சி**

# தியாக பூமி

அமரர் கல்கி

## 62. மீனாவின் கணவன்

"அந்த அம்மாள் என் அத்தை மீனாதான்!" என்று சாவித்திரி சொன்னதும், சம்பு சாஸ்திரி, "குழந்தை! கொஞ்சம் இரு! என்னமோ பண்ணுகிறது" என்று சொல்லி விட்டு நாற்காலியில் சாய்ந்தார்.

சாவித்திரி கலவரமடைந்து, "டாக்டரை அழைச்சுண்டு வரச் சொல்லட்டுமா, அப்பா!" என்றாள்.

"வேண்டாம் அம்மா! எனக்கு உடம்பு ஒன்றுமில்லை; நெஞ்சுதான் படபடக்கிறது" என்றார்.

அப்போது சம்பு சாஸ்திரியின் மனக் கண்ணின் முன்பு சரியாக முப்பது வருஷத்துக்கு முன்னால் நடந்த சம்பவம், எதிரில் அப்போது நடப்பது போல் தோன்றியது. மீனாவுக்குக் கல்யாணம் ஆகி ஐந்தாறு வருஷம் ஆகிவிட்டது. அவளுடைய புருஷனைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. சிலர் அவன் அக்கரைச் சீமைக்குப் போய்விட்டானென்று சொன்னார்கள், வேறு சிலர் அவன் கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்துவிட்டதாகக் கூறினார்கள். ராமச்சந்திரன் திருச்சிராப் பள்ளியிலுள்ள ஒரு கிறிஸ்தவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபடியாலும், அந்தக் கல்லூரியை நடத்திய ரோமன் காத்தலிக் பாதிரிமார்கள் அப்போது மதமாற்றும் வேலையில் ரொம்பவும் தீவிரமாயிருந்தபடியாலும், அவன் கிறிஸ்தவனாகிவிட்டான் என்னும் வதந்தி நம்பக் கூடியதாயிருந்தது.

இந்த நிலைமையில், பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தடவை வரும் பிரசித்தமான மகாமக உத்ஸவம் வந்தது. சம்பு சாஸ்திரி தம்முடைய குடும்பத்தாரையும் அழைத்துக் கொண்டு கும்பகோணத்துக்குப் போனார். குடும்பத்தார் என்றால், சாஸ்திரியின் முதல் மனைவி பாக்கியம், தங்கை மீனா, வயதான அத்தை இவர்கள் தான். கும்பகோணத்தில் கடலங்குடித் தெருவில் சம்பு சாஸ்திரி ஜாகை போட்டிருந்தார். மகாமகத்துக்கு நாலு நாளைக்கு முன்னாலேயே போய்விட்டார். மகாமகத்தன்று எல்லாரும் மாமாங்கக் குளத்திற்கு ஸ்நானம் செய்யப் போனார்கள். ஜனக் கூட்டம் ரொம்ப அதிகமாயிருந்தபடியால், ஒருவருக்ொருவர் பிரிந்து போனாலும் தனித் தனியாக ஜாகைக்கு வந்து சேர்ந்துவிட வேண்டுமென்று பேசிக் கொண்டார்கள். கூட்டத்தில் திருட்டுப் பயத்தை உத்தேசித்து ஸ்திரீகள் நகை நட்டுகளையெல்லாம் கழற்றி வைத்துவிட்டு வந்தார்கள். மாமாங்கக் குளத்தில் ஸ்நானம் செய்யும் வரையில் எல்லாரும் ஒன்றாக இருந்தார்கள். கரையேறும் போதும் ஒன்றாக ஏறினார்கள். ஆனால், ஜாகைக்குப் போய்ச் சேர்ந்ததும் பார்த்ததில், மீனாவை மட்டும் காணோம்! கூட்டத்தில் பிரிந்து போயிருப்பாள், ஜாகை தான் தெரியுமே, தானே வந்துவிடுவாள் என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். வெகு நேரம் வரையில் வராமற் போகவே கவலை உண்டாயிற்று. சாஸ்திரி மீனாவைத் தேடுவதற்காகக் கிளம்பிக்கொண்டிருந்த சமயத்தில் அவருடைய மனைவி பாக்கியம் ஓடி வந்து ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தாள். கழற்றி வைத்த நகைகளை எடுத்துப் பூட்டிக் கொள்வதற்காக டிரங்குப் பெட்டியைத் திறந்ததாகவும், அதில் இந்தக் கடுதாசி இருந்ததாகவும் சொன்னாள். கடுதாசியில் பின் வருமாறு எழுதியிருந்தது.

"அண்ணா! இந்த ஜன்மம் எனக்குப் பிடிக்கவில்லை. அவரைப் பிரிந்து என்னால் வாழ முடியாது. நான் போகிறேன். நீயும் மன்னியும் என்னை மன்னித்து விடுங்கள். - மீனா."

இதைப் படித்த சாஸ்திரி பைத்தியம் பிடித்தவர் போலானார். அந்த மாகமகக்

கூட்டத்தில் கும்பகோணத்தின் வீதிகளில், "மீனா! மீனா!" என்று கூவிக்கொண்டு அலைந்தார். கூட்டத்தில் இடிபட்டோ, குளத்தில் மூழ்கியோ செத்துப் போனவர்களைப் போலீஸார் எடுத்துப் போட்டிருந்த இடத்துக்கெல்லாம் ஓடி, மீனாவின் பிரேதமாய் இருக்குமோ என்று பதைபதைப்புடன் பார்த்தார். ஆனால், மீனாவோ அவளுடைய உயிரில்லாத உடலோ கிடைக்கவேயில்லை.

இரண்டு நாள் இப்படிச் சொல்ல முடியாத வேதனையும் துன்பமும் அநுபவித்துவிட்டுச் சாஸ்திரி தம் மனைவியையும் அத்தையையும் அழைத்துக்கொண்டு ரயிலேறப் போனார். அவர்களை ஊரில் கொண்டுபோய் விட்டுவிட்டுத் திரும்பி வந்து தேட வேண்டுமென்பது அவருடைய எண்ணம். ரயில்வே ஸ்டேஷனில், மகாமகக் கூட்டத்தைக் கொண்டு போவதற்காக அரை மணிக்கு ஒரு ரயிலாகக் கிளம்பிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு ரயில் வந்து பிளாட்பாரத்தில் நின்றதும், ஜனங்கள் மோதிக்கொண்டு போய் ஏறினார்கள். சாஸ்திரியாரால் இந்தக் கூட்டத்தில் முண்டி அடித்து ரயில் ஏற முடியவில்லை. அவர் வந்த பிறகு மூன்று ரயில் போய்விட்டது. நாலாவது ரயிலிலும் அவருக்கு இடங் கிடைக்கவில்லை. ஆனால் நாலாவது ரயில் கிளம்பியபோது, அந்த ரயிலில்



இரண்டாம் வகுப்பு வண்டி ஒன்றில் சாஸ்திரி ஓர் அதிசயத்தைக் கண்டார். அந்த நம்ப முடியாத காட்சியை அவர் கண்டபோது, அவருடைய நெஞ்சில் கூரிய ஈட்டியைச் செலுத்துவது போல் இருந்தது.

அவள் மீனாதான்; சந்தேகமில்லை. கொஞ்சம் சந்தேகம் இருந்தாலும், சாஸ்திரியைக் கண்டதும் அவளுடைய முகம் அடைந்த மாறுதலினால் சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. கண் விழி தெறித்து விழுந்துவிடும் போல் இருந்தது. அவள் சாஸ்திரியைப் பார்த்த பார்வை. மீனாவுக்குப் பக்கத்தில் ஒரு மனுஷன் உட்கார்ந்திருந்தான். அவன் நம் ஊர்க்காரனில்லை; வடக்கத்தியான். பார்ஸிக்காரர்களைப் போல் தொப்பியும் உடுப்பும் அணிந்து, கோரா கிருதா மீசையுடன் தோன்றினான்.

மீனா வெளிப்புறம் நோக்குவதையும், பிளாட்பாரத்தில் சம்பு சாஸ்திரி நிற்பதையும் கண்ட அந்தப் பார்ஸிக்காரன் சட்டென்று ரயிலின் ஜன்னல் கதவைத் தூக்கிச் சாத்தினான். அப்போது அவனுடைய கை மீனாவின் தோளின் மேல் இருந்தது.

இதெல்லாம் அரை நிமிஷத்தில் நடந்தவை. அவன் ஜன்னல் கதவைத் தூக்கும்போதே ரயில் நகரத் தொடங்கி விட்டது. "மீனா! மீனா!" என்று கதறிக்கொண்டே சம்பு சாஸ்திரி நகருகிற ரயிலோடு தாமும் நடந்தார். அவர் நாலடி நடப்பதற்குள், ஒரு போர்ட்டர் வந்து அவரைப் பிடித்து நிறுத்தினான். வண்டி போயே போய்விட்டது.

பிறகு சாஸ்திரி நெடுங்கரைக்கு வந்தார். கடுதாசியில் எழுதியிருந்தபடி மீனா செத்துப் போயிருக்கக்கூடாதா, ஸ்வாமி! இந்தப் பாப காரியத்தைச் செய்ய வேண்டுமா? என்று அவருடைய உள்ளம் கொந்தளித்தது. தன்னைப் பொறுத்த வரையில் இனிமேல் அவள் செத்தவள்தான் என்று தீர்மானித்தார். ஊராருக்கும், மீனா மாமாங்கக் குளத்தில் முழுகிச் செத்துப் போனாள் என்று சொல்லி விட்டார்.

அவர் ஒருவித வெறுப்புடன் இப்படிச் சொன்னபடியால் ஊரார் அவர் சொன்னதை நம்பவில்லை. ரயில்வே ஸ்டேஷனில் நடந்த சம்பவமும் அவர்கள் காதுக்கு அரை குறையாக எட்டிவிட்டது. என்வே, அவர்கள் தத்தமக்குத் தோன்றியபடி சொல்லி வந்தார்கள். "யாரோ வடக்கத்தியானைப் பிடித்துக் கொண்டு ஓடி விட்டாள்" என்று சிலரும் "கிறிஸ்துவனாய்ப் போன ஆம்படையானோடு சம்பு சாஸ்திரியே கூட்டி அனுப்பி விட்டார்" என்று வேறு சிலரும் கூறிவந்தார்கள்.

மேற்சொன்ன சம்பவத்திற்குப் பிறகு சம்பு சாஸ்திரியின் வாழ்க்கையில் எவ்வளவோ மாறுதல்கள் நடந்து விட்டன. எத்தனையோ சுக துக்கங்களை அநுபவித்து விட்டார். ஆனால், அவருடைய இருதய அந்தரங்கத்தில் மீனாவின் ஞாபகம் குடிகொண்டிருந்தது. சம்பு சாஸ்திரி மீனாவிடம் அன்பு கொண்டிருந்ததுபோல் வேறு யாரிடமும் வைக்கவில்லை. பிற்காலத்தில் சாவித்திரியிடமும் சாருவிடமும் வைத்த அன்புகூட அடுத்தபடியென்றே சொல்ல வேண்டும். ஆகையால், மீனாவையும் அவளுடைய பாப காரியத்தையும் மறப்பதற்கு அவர் எவ்வளவோ முயற்சி செய்தும் முடியவில்லை.

சாவித்திரி மீனாவைப்பற்றி இப்போது சொன்னதும் சாஸ்திரியின் உள்ளத்தில் புதைந்து கிடந்த உணர்ச்சியெல்லாம் பொங்கி எழுந்தது. உணர்ச்சி மிகுதியினால் உடம்பு நடுங்கிற்று. கொஞ்சம் படபடப்பு அடங்கிப் பேசும் சக்தி வந்ததும், "குழந்தை! நிஜமாக மீனாதானா உனக்கு அடைக்கலம் கொடுத்துக் காப்பாற்றினாள்? அந்தப் பாப ஜன்மத்தின் சொத்துத்தானா இதெல்லாம்?" என்றார்.

"ஐயோ! அப்படிச் சொல்லாதேங்கோ, அப்பா! என் அத்தையைப் பாப ஜன்மம் என்று சொல்கிறவர்களுக்கு ஈரேழு பதினாறு ஜன்மத்திலும் விமோசனம் கிடையாது" என்றாள் சாவித்திரி.

அப்போது சாஸ்திரிக்குப் பளிச்சென்று இன்னொரு ஞாபகம் வந்தது! குழந்தை சாவித்திரி! அவாள் இரண்டு பேரும் நம்ம பக்கத்து மனுஷ்யாள்தான் என்று சொன்னே போலிருக்கே?" என்று ஆவலுடன் கேட்டார்.

"ஆமாம், அப்பா! அத்தையோடே நீங்க ரயில்லே பார்த்தது வேறே யாருமில்லை; என் அத்திம்பேர் ராமச்சந்திரய்யர்தான்" என்றாள்

## அருள்வாக்கு

முன்பெல்லாம் லாந்தர் விளக்குகள் தாம் இருந்து வந்தன. அதில் நாலு பக்கம் கண்ணாடி போட்டதும் உண்டு; முப்பட்டை மாதிரி மூன்று பக்கம் கண்ணாடி போட்டது மாதிரியும் உண்டு. நாம் இந்த முப்பட்டை லாந்தரைப் பார்ப்போம். கண்ணாடிக்குள்ளே விளக்கு ஏற்றி வைத்திருக்கும். அதன் ஒளி மூன்று பக்கத்தாலும் கண்ணாடி வழியாக வெளியே வரும். சில சமயங்களில்அலங்காரமாக, இந்தக் கண்ணாடி ஒவ்வொன்



னுக்கும் ஒரு வர்ணம் பூசியிருப்பார்கள். உள்ளேயிருக்கிற ஒளி, கண்ணாடி வழியாக வருகிறபோது அதன் வர்ணமாகத் தெரியும். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்று மூன்று காரியங்களை ஒரே பரமாத்மா பண்ணுகிறது. ஒரே சைதன்யம் (அறிவொளி) தான் மூன்றுக்கும் காரணம். அந்த சைதன்யம் முப்பட்டைலாந்தருக்குள் இருக்கிற விளக்கு மாதிரி.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

சாவித்திரி.

சம்பு சாஸ்திரி சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, "நிஜமாவா, சாவித்திரி! நிஜந்தானா சொல்றே?" என்று அலறினார்.

"சத்தியமா, அப்பா!" என்றாள் சாவித்திரி.

சாஸ்திரி உடனே சாந்தமடைந்தவராய் "ஆனால் ஏன் நிஜமாயிருக்கப்படாது? பராசக்தி அருளால் என்னென்ன அதிசயமெல்லாம் நடந்திருக்கிறது? இதுவுந்தான் ஏன் நிஜமாயிருக்கப்படாது?" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

சாவித்திரி சொன்னாள்: "அப்பா! அத்திம்பேர் மேலே அப்போது ஏதோ ராஜாங்கத் துரோகக் கேஸ் இருந்ததாம். அந்தக் காலத்திலே, அதாவது மகாத்மா காந்தி தலைவராய் வர்றதுக்கு முன்னாலே, வெடிகுண்டு போட்டாத்தான் நம்ம தேசத்துக்கு விடுதலை கிடைக்கும்னு சில பேர் முட்டாள்தனமா நினைச்சுண்டிருந்தாளாம். அந்த மாதிரி ஒரு வெடிகுண்டு கேஸிலே அத்திம்பேர் அகப்பட்டுண்டிருந்தாராம். அதிலே தப்பிக்கிறதற்காக அவர் பார்ஸிக்காரர் மாதிரி வேஷம் போட்டுண்டு இருந்தாராம். கும்பகோணத்திலே மாமாங்கத்துக்கு முதல் நாள் அவர் அத்தையைப் பார்த்துட்டு, கூட்டத்திலே உங்களிடமிருந்து பிரியற சமயம் பார்த்துண்டிருந்து, 'உங்க அண்ணாகிட்டக் கூடச் சொல்லாமே என்னோடு வர்றதா இருந்தா வா' என்று கூப்பிட்டாராம். அத்தை சம்மதிச்சு உங்களுக்குக் கடுதாசி எழுதி வைச்சுட்டு அவரோடே கிளம்பிப் போனாளாம். அவள் செத்துப் போய் விட்டதாக நீங்கள் நினைச்சுக்கணும்னு அத்தைக்கு எண்ணமாம். ஸ்டேஷன் பிளாட்பாரத்திலே உங்களைப் பார்த்ததும், அவளை நீங்க தெரிஞ்சுண்டுட்டயளோ என்னமோ, என்ன நினைச்சுண்டயளோ என்னமோன்னு அத்தை பட்ட மனவேதனைக்கு அளவேயில்லையாம். இருந்தாலும், அத்திம்பேர் மேலே கேஸ் இருந்தபடியினால் அப்படி உங்களிடம் சொல்லிக்காம போக வேண்டியதாய் ஆச்சாம். இதையெல்லாம் உங்கள் கிட்ட விவரமாய்ச் சொல்லி அத்தையை நீங்கள் மன்னிக்கணும்னு கேட்டுக்கச் சொன்னாள், அப்பா!"

"சாவித்திரி! நான் என்ன சொல்லப் போறேன்! இருபத்தைந்து வருஷமா என் மனஸிலிருந்த புண் இன்னிக்குத்தான் ஆறித்து" என்றார் சாஸ்திரி.

மீனாவையும் அவளுடைய புருஷனையும் பற்றிச் சாவித்திரி எவ்வளவுதான் சொன்னாலும் சம்பு சாஸ்திரி திருப்தியடையவில்லை. மேலும் மேலும் அவர்களைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார். சாவித்திரிக்கும் அவர்களைப் பற்றிப் பேசப் பிரியமாயிருந்தது. அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றியும் தன்னிடம் அவர்கள் காட்டிய அன்பைப் பற்றியும் சலிப்படையாமல் சொல்லிக் கொண்டிருந்தாள். அத்தையும் அத்திம்பேரும் பல இடங்களில் அலைந்து திரிந்தது, கடைசியில் அத்திம்பேர் லாலா ராம்சந்த் ராய் என்ற பெயருடன் ஒரு பெரிய இரும்பு வியாபாரியிடம் கடையில் வேலைக்கு அமர்ந்தது, வியாபார நுட்பங்களைத் தெரிந்து கொண்டு, தாமே இரும்பு வியாபாரம் ஆரம்பித்தது, ஐரோப்பிய மகாயுத்தத்தின்போது இரும்பின் விலை திடீரென்று உயர்ந்ததன் பலனாக, அவருக்கு ஏராளமான லாபம் வந்து பெரிய பணக்காரரானது-எல்லாம் தான் அத்தையிடம் கேட்டபடி கதை கதையாகச்




சொன்னாள்.

"அப்பா! இந்த ஊர் மீனாக்ஷி ஆஸ்பத்திரிக்கு நான் ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்தேனே, ஏன் தெரியுமா?" என்று சாவித்திரி கேட்டாள்.

"சாரு அந்த ஆஸ்பத்திரியிலே பிறந்தாள் என்றுதான் சொன்னயே, அம்மா!" என்றார் சாஸ்திரி.

"அது வாஸ்தவந்தான். அப்பா! ஆனால், அதற்காக அவ்வளவு பெரிய தொகையை நானாகவே கொடுத்துவிட வில்லை. அத்தையின் விருப்பத்தின்படிதான் கொடுத்தேன். நான் பட்ட கஷ்டத்தையெல்லாம் திருப்பித் திருப்பிச் சொல்லச் சொல்லிக் கேட்டு அத்தை கண்ணீர் விட்டு அழுவாள். அவ்வளவு கஷ்டப் பட்ட சமயத்தில் எனக்கு இந்த மீனாக்ஷி ஆஸ்பத்திரியில் அடைக்கலம் கிடைத்தது என்பது அத்தையின் மனத்தை உருக்கிவிட்டது. ஆஸ்பத்திரியின் பெயரும் தன்னுடைய பெயராயிருந்தபடியால் இதில் பகவானுடைய ஆக்ஞை இருப்பதாக நினைத்து, தன்னுடைய சொத்தில் பாதியை அந்த ஆஸ்பத்திரிக்கு நன்கொடையாகக் கொடுக்க வேண்டுமென்றும், பாக்கியை நான் வைத்துக் காப்பாற்றி என் குழந்தைக்குக் கொடுக்க வேண்டுமென்றும் சொன்னாள். அதன்படியேதான் ஐந்து லட்ச ரூபாய் மீனாக்ஷி ஆஸ்பத்திரிக்குக் கொடுத்தேன், அப்பா!" என்றாள்.

இதையெல்லாம் அறிந்து சம்பு சாஸ்திரி எவ்வளவோ சந்தோஷமடைந்தார். மீனாவின் பேரில் தாம் கொண்ட சந்தேகம் தவறு என்று தெரிந்ததோடல்லாமல், தம் குழந்தைக்கு அடைக்கலம் அளித்தவள் அவள்தான் என்பதும், அவளுடைய சொத்துத்தான் இப்போது சாவித்திரியிடம் இருப்பது என்பதும் சாஸ்திரிக்கு எல்லையற்ற மகிழ்ச்சியளித்தது. ஆனாலும், அவருடைய ஆனந்தம் பரிபூரண மடைவதற்குத் தடையாக இன்னும் ஒரே ஒரு குறை இருக்கத்தான் செய்தது.

நடந்து போனதையெல்லாம் சாவித்திரியும் ஸ்ரீதரனும் மறந்து மனம் ஒத்து வாழ வேண்டுமென்று அவர் விரும்பினார். கேஸில் சாவித்திரியின் பக்கம் தோற்று ஸ்ரீதரன் ஜயித்தால்தான் இந்த விருப்பம் நிறைவேறுமென்று அவர் எண்ணினார். எனவே, "ஸ்வாமி! பகவானே! ஸ்ரீதரன் ஜயிக்கட்டும், சாவித்திரி தோற்கட்டும்!" என்று அவர் பிரார்த்தனை செய்தார்.

அவருடைய பிரார்த்தனை பலித்தது!

(தொடரும்)

# தன்மானக் கவிஞன் ராஜாமணி!

சத்யா

ராஜாமணியின் கெட்ட நேரமோ அல்லது புதுக்கவிதையின் கெட்ட நேரமோ தெரியவில்லை, ராஜாமணிக்குப் புதுக்கவிதை எழுதும் ஆசை வந்து விட்டது. மரபுக் கவிதை எழுத முயற்சித்துப் பார்த்து, முடியாததால் இனி புதுக் கவிதையைத்தான் எழுதுவது என்ற திட்டவட்டமான முடிவுக்கு அவன் வந்திருந்தான்.

இலக்கண உபத்திரவம் இல்லை. மனத்தில் தோன்றுவதை எழுதித் துண்டு துண்டாக வெட்டினால் போதும், அதுதான் புதுக் கவிதை என்று எண்ணிய ராஜாமணிக்குப் புதுக்கவிதையின் மீது அலாதிப் பற்று உண்டாயிற்று.

புதுக்கவிதையின் மேல் ராஜாமணிக்கு வெறியே ஏற்படுவதற்குச் சரித்திரப் பின்னணி ஒன்று இல்லாமலும் போகவில்லை. பாலக்காட்டிலிருந்து விடுமுறைக்காக வந்திருந்த பெரியப்பாவினால் வந்த வினைதான் அவ்வளவும்.

''எஸ்.எஸ்.எல்.ஸி. படித்துவிட்டு எந்த வேலையும் தேடிக் கொள்ளத் தெரியாத கழுதை'' என்று பெரியப்பா தன்னை வர்ணித்ததைக் கூட ராஜாமணி சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை. 'அவ்வளவு தூரத்திலிருந்து வந்ததற்கு இதைக் கூடச் சொல்லா விட்டால் எப்படி? தம்பி மகன் மீது தனக்கிருக்கும் அக்கறையைக் காட்டிக் கொள்ள அவருக்குத் தெரிந்த வழி இதுதான். சொல்லி விட்டுப் போகட்டும்' என்றுதான் விட்டு விட்டான்.

ஆனால் 'உருப்படியா ஒரு கடிதாக எழுதக் கூடத் துப்பில்லை' என்று அவர் கூறியதுதான் ராஜாமணியின் இலக்கிய வெறி கிளம்புவதற்குக் காரணமாகி விட்டது.

தம்மால் தமிழ் மொழிக்கு இவ்வளவு பெரிய சோதனை வரும் என்று தெரிந்திருந்தால், பெரியப்பா ராஜாமணியின் கோபத்தை அப்படிக் கிளறியிருக்க மாட்டார். 'தமிழில் ஒழுங்காக நாலு வரி கூட எழுதத் தெரியாதா? தப்புத் தப்பாகக் கடிதம் எழுதுகிறாயே நீயெல்லாம் எந்த ஆபீஸில் வேலைக்குச் சேர்ந்து என்ன குப்பை கொட்டப் போகிறாயோ?' என்று ராஜாமணியின் மீது எரிந்து விழுந்தார்.

பெரியப்பா நல்ல திடகாத்திரமான ஆள். அவர் மீது கோபத்தைத் திருப்பிக் காட்டுவது புத்திசாலித்தனமல்ல என்பதை உணர்ந்திருந்ததனால்தான் ராஜா மணியின் கோபம் தமிழின் மீது திரும்பியது.

'எனக்கா தமிழ் எழுதத் தெரியாது?' என்று பொங்கியெழுந்தான் ராஜாமணி. 'எழுது, ராஜாமணி. எழுது. நீ எழுதப் பிறந்தவன்' என்று அவனுள் இருந்து ஏதோ ஒரு சக்தி அவனை உந்தித் தள்ளியது.

'தான் ஒரு கவிஞன் என்று உணர்ந்த மாத்திரத்திலேயே, 'இவ்வ

ளவு முட்டாள்களுக்கு நடுவே நாம் வாழ வேண்டியிருக்கிறதே' என்ற ஒரு விதமான சலிப்பு ஏற்பட்டது ராஜா மணிக்கு.

'ராஜாமணி... நீ இவ்வளவு பெரிய தமிழ்க் கவிஞனா வருவேன்னு நான் நினைச்சுக் கூடப் பார்க்கலைப்பா! தமிழக அரசு உன்னை ஆஸ்தானக் கவிஞரா நியமிச்சு, மாசம் இருபதாயி ரம் ரூபாய் சம்பளம் தராங்களாமே?' என்று பெரியப்பா கையைக் கட்டிக் கொண்டு தன்னிடம் கூறும் காட்சி ராஜாமணியின் கற்பனையில் தோன்றி யது.

கற்பனை உடனே துண்டிக்கப்பட் டது கையை பவ்யமாகக் கட்டிக் கொண்டிருந்த பெரியப்பா, திடீரென்று கண்களை உருட்டி குரலை உயர்த்தி னார்.

"தடிக் கழுதை. ஏன் இப்படி பிரமை பிடிச்ச மாதிரி நிக்கறே? நாலு கம்பெனி யிலே ஏறி இறங்கி வேலை கேளு. நான் ஊருக்குப் போறதுக்குள்ளே ஒரு வேலை தேடிக்கலைன்னா நான் பொல்லாதவனாயிடுவேன்; ஆமா!"

'பொல்லாதவன் ஆகிவிடுவேன்' என்று சொன்னதோடு நிறுத்தியிருக்க லாம். ராஜாமணியின் பின் மண்டை யில் 'பட்'டென்று ஒரு தட்டுத் தட்டி, 'தேவைப்பட்டால் அடிக்கவும் தயங்க மாட்டேன்' என்று சூசகமாக உணர்த் தவும் செய்தார்.

ராஜாமணிக்குக் கோபம் தலைக் கேறியது. இனியும் அங்கே நிற்பது விபரீதமான விளைவுகளை ஏற்படுத் தும் என்று உணர்ந்து விடுவிடென்று வெளியேறினான்.

**அமெரிக்கர்கள் தங்கள் சாப்பாட்டுச் செல வுக்காகச் செலவழிக்கக் கூடிய தொகை, வரு மானத்தில் பதினாறு சதவீதம். பிரான்ஸ் நாட் டினர் தங்கள் வருமானத்தில் இருபத்தொன்பது சதவீதம் செலவழிக்கின்றனர். இத்தாலி நாட் டினர் நாற்பத்தைந்து சதவீதம் செலவழிக் கின்றனர். இந்தியர்கள் எண்பது சதவீதம் செலவழிக்கின்றனர்.**

**- எஸ். முகம்மது யூசுப்**



"எங்கேடா போறே? ஊர் சுற்றவா?" என்று கத்தினார் பெரியப்பா.

"நானும் சூரியனும் ஒன்றுதான்
நான் ஊரைச் சுற்றுகிறேன்.
அவன் உலகைச் சுற்றுகிறான்
அவ்வளவுதான் வித்தியாசம்
பாவிகள் சாவி கொடுத்து ஆவிகள் சாவதில்லை
நான் வருகிறேன்"

என்று பதிலளித்தான் ராஜாமணி. பெரியப்பாவுக்குப் 'பகீர்' என்றது. 'மண்டையில் பலமாக அடித்து விட் டோமோ?' என்று குழப்பத்தில் ஆழ்ந் தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ராஜா மணியின் சிந்தனை, சொல், செயல் எல்லாமே புதுக் கவிதை ரகத்திலேயே அமைந்தன. ராஜாமணியின் தந்தை நிஜமாகவே பயந்து போனார். 'வேலை கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை. பையன் பழையபடி புத்தி ஸ்வாதீனத் தோடு நடமாடினாலே போதும்' என்று கவலைப்பட்டார்.

"ராஜாமணி, என்னடா இது, தத்துப் பித்துன்னு பேசிக்கிட்டு?"

"வானவில்லைக் காணவில்லை. கண்டுபிடித்து வளைப்பேன். கண்டபடி உடைப்பேன்!"

"சரியாப் பேசாம இதென்னடா உளறல்?"

"என்னது? என் கவிதை உமக்கு உளறலாகத் தெரிகிறதா? அப்பா, வேண் டாம்! தயவுசெய்து ஆகாயத்தில் ஆணி அடிக்காதீர்! வெங்காயத்தை வேக வைக்காதீர்! விந்திய மலையில் வெந்தயம் பயிரிடாதீர்!"

"இதான் கவிதையா? அதுக்கெல் லாம் தனி அறிவு வேணும்டா ராஜா மணி. சொன்னாக் கேளு. கொஞ்சம் கஷ்டப்பட்டா குமாஸ்தா வேலை கிடைக்காம போகாது. இந்த மாதிரி யெல்லாம் கவிதை எழுதி தமிழ் தெரிஞ்சவங்க வயிற்றெரிச்சலைக் கொட்டிக்காதே! அவங்க மனசைப் புண்படுத்தாதே! நீ தமிழுக்காக உயி ரைக் கொடுக்க வேண்டாம். அதன் உயிரோட விளையாடறதை நிறுத்தி னாலே போதும்" - இதமாகச் சொன் னார் ராஜாமணியின் தந்தை. ராஜா மணியாவது கேட்பதாவது!

"ஏன், நான் கவிதை எழுதினால் என்ன? காற்றுக்கும் வேர்ப்பதுண்டு.

கங்கைக்கும் தாகம் உண்டு. சோற்றுக் கும் பசியெடுக்கும். நெருப்புக்கும் குளி ரெடுக்கும்" என்று பதிலுக்கு நெத்தியடி அடித்தான்.

ராஜாமணியின் தாய் 'ஓ' வென்று அழ ஆரம்பித்து விட்டாள்.

"ஏங்க, ராஜாமணியை உடனே டாக்டர்கிட்டே கூட்டிக்கிட்டுப் போங்க. எந்தப் பாவி கண்ணுபட்டுதோ, இப்படி ஆயிட்டானே?" என்று புலம்ப, ராஜாமணிதான் சமாதானப்படுத்தினான்.

"தாயே, கால்வாயில் கால் வைத்தவன் உண்டு. வாய்க்காலில் வாய் வைத்தவன் உண்டா? இந்து மகா சமுத்திரத்தில் சந்து பொந்துகள் ஏது? இதற்கு ஏன் கலங்குகிறீர்கள்?' - என்று



ராஜாமணி தன் தாயாருக்கு ஆறுதல் கூறி, அவள் சோகத்தை மேலும் அதிகப்படுத்தினான்.

தான் பிள்ளையார் பிடிக்கப் போய் குரங்காக முடிந்ததில் பயந்துபோன பெரியப்பா, பாலக்காட்டுக்குத் திரும்பி விட்டார். ஆனால், ராஜாமணி சகஜ நிலைக்குத் திரும்பவில்லை.

பத்திரிகைகளுக்குச் சரமாரியாக எழுதித் தள்ளினான். அவன் கவிதைகள் புரியாவிட்டாலும், பக்கங்களை நிரப்ப விஷயம் கிடைக்காத பத்திரிகைகள், அவற்றைப் பிரசுரித்தன. இலக்கிய விமர்சகர்களோ, அவனுடைய கவிதைக்குப் புதிய புதிய அர்த்தங்களைக் கண்டுபிடித்து கட்டுரைகளை எழுதித் தள்ளி னார்கள்.

டாக்டர் பட்டம் வாங்க எண்ணிய தமிழ் எம்.ஏ. மாணவர்கள், எம்.ஃபில்லுக்கு அவன் கவிதைகளை ஆராய்ந்திருந்தார்கள். அவன் புகழ் மேலும் பரவியது. சந்தேகப் பேர்வழிகளுக்கு அவன் தந்த இறுமாப்பான பதில்கள் அவனைத் தன்னம்பிக்கையும் தன்மானமும் மிக்க இலக்கியவாதி என்று பெயர் பெறச் செய்தன.

மீண்டும் பாலக்காட்டு பெரியப்பா வந்தார். ஆனால், இம்முறை ராஜா மணியை அவர் கோபித்துக் கொள்ள வில்லை.

"எனக்கு அப்பவே தெரியும், இவன் இலக்கிய ராஜாவாகவும் கவிதை மணியாகவும் விளங்கு வான்னு" என்று சொல்லிச் சொல்லிப் பெருமைப்பட் டார்.

அதற்குக் காரணம் இல்லாமலும் போகவில்லை. ராஜாமணி பத்திரிகை பேட்டி ஒன்றில் தனது கவி ஆர்வத்தைத் (தலையில்) தட்டிக் கொடுத்துத் தூண்டிவிட்டவர் தன் பெரியப்பாதான் என்று கூறியிருந் தானே!



**ச**ர்வதேச அளவில் நடந்த தோல் பொருள் (குறிப்பாக ஆடைகள்) கண்காட்சிகளில், ஃபாஷன் ஷோ நடத்திய ஒரே இந்திய ஏற்றுமதியாளர் என்கிற பெருமை, திருமதி கிரன் பட்ராவுக்குத்தான். "87 - ல் பாரிசிலும் 88 - ல் லண்டனிலும் ஃபாஷன் ஷோ நடத்தினேன். சர்வதேச அளவில் அவற்றுக்குக் கிடைத்த வரவேற்பு எனக்கு உற்சாகத்தை அளித்தது!'' என்கிறார் கிரன்.

தோல் ஆடைகள் மற்றும் தோல் பொருள்கள் ஏற்றுமதியில் ஈடுபட்டிருக்கும் ஒரே இந்தியப் பெண்மணி என்கிற பெருமையும் கிரனுக்குத்தான். இது எப்படி அவருக்குச் சாத்தியமானது?

"நான் டெல்லியில் ஃபாஷன் டிசைனிங்கில் டிப்ளோமா படித்தேன். தோல் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த பட்ரா குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டதால், தோலாடைகளில் டிசைன் செய்ய ஆரம்பித்தேன். வெளிநாடுகளுக்கெல்லாம் சுற்றுப் பயணம் செய்து, அங்குள்ள தோலாடைகள்





• சுசீல் பட்ரா



• கிரன் பட்ரா







வியாபாரிகளோடும் உபயோகிப்பாளர்களோடும் பேசிப் பார்த்து, அவர்களின் ரசனைகளைப் புரிந்து கொண்டு டிசைன் செய்தேன். அவற்றுக்கு நல்ல வரவேற்பு இருந்ததால், ஏற்றுமதி சுலபமானது.

"எப்போதுமே பல்வேறு நாடுகளின் வியாபாரிகளோடு தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதால், அவ்வப்போது மாறிக் கொண்டுவரும் ஃபாஷன்களையும் உடனுக்குடன் புரிந்து கொண்டு செயல்பட முடிகிறது. அங்குள்ள வியாபாரிகளும் இங்கு வந்து தங்களுக்கு இன்னின்ன மாதிரியான டிசைன்கள் தேவை என்று சொல்லுவார்கள். அதன்படியும் அல்லது அதைச் சற்று மேம்படுத்தியும் நாங்கள் தயாரித்து அனுப்புகிறோம்!" என்கிறார் ஆண்டுக்கு இருபத்தேழு கோடி ரூபாய் அளவுக்கு ஏற்றுமதி வியாபாரம் செய்யும் கிரன்.

உண்மையில், ஃபாஷன் என்பது மக்களின் ரசனையைப் புரிந்து கொண்டு, அதற்கேற்றபடி ஃபாஷன் டிசைனர்கள் உருவாக்குகிற ஒரு விஷயமா அல்லது தங்கள் கற்பனைத் திறன்படி டிசைனர்கள் உருவாக்குகிற ஒரு விஷயத்தை மக்கள் ஃபாஷனாக ஏற்றுக் கொள்கிறார்களா?.

"இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது அவ்வளவு சுலபமல்ல!" என்கிறார், தோல் பொருள்கள் ஏற்றுமதியாளரான என்.வி.எஸ்.மணியன்.

"கோழியிலிருந்து முட்டையா, முட்டையிலிருந்து கோழியா என்கிற மாதிரிதான் ஃபாஷன் விஷயமும். உதாரணத்திற்கு ஒன்று சொல்லுகிறேன். கடந்த 70 - களில் தரங்குறைந்த தோல்கள் நிறையத் தேங்கிப் போய்விட்டன. அவற்றை என்ன செய்வது என்று வியாபாரிகள் தவித்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் பிரெஞ்சு ஃபாஷன் டிசைனர் ஒருவர், அந்தத் தரங்குறைந்த தோல்களைக் கொண்டே ஆடைகள் தயாரித்து, அதற்கு 'Jungle Suede' என்றும் பெயரிட்டு விற்பனைக் குக் கொண்டு வந்தார். விற்பனை பிய்த்துக் கொண்டு போனது!

"இதுவே, எல்லா நேரத்திலும் செய்துவிட முடிகிற காரியமும் இல்லை. ஆக, மக்களின் ரசனைகளையும் ஒரு ஃபாஷன் டிசைனர் புரிந்து கொண்டு, அதற்குத் தகுந்த மாதிரி தமது கற்பனைத்



# கிரண் செய்யும் ஏற்றுமதி 27 கோடி!

திறனையும் கலந்து, புதிய ஃபாஷன்களை உருவாக்க வேண்டும்!" என்கிறார் மணியன்.

வெளிநாடுகளில் சுற்றுப்புறச் சூழல் விழிப்புணர்வு அதிகம். குறிப்பாகத் தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் கழிவு நீர் பாதிப்பு பற்றி அவர்கள் முழுமையாக அறிந்திருக்கிறார்கள். அதனால்தான், தோல் ஆடைகளையும் சரி, பதனிடப்பட்ட தோல்களையும் சரி, இந்தியா போன்ற நாடுகளிடமிருந்து இறக்குமதி செய்து கொள்வதன் மூலம், தங்கள் நாடுகளின் சுற்றுச் சூழலைப் பாதுகாத்துக் கொள்கிறார்கள். ஆனால், நம் நாட்டிலோ, அரசும் சரி, தோல் சம்பந்தமான பொருள்கள் மற்றும் ஆடைகள் தயாரிப்பவர்களும் சரி, சுற்றுப்புறச் சூழல் பற்றிக் கவலைப்படுவதாகவே தெரியவில்லை. இது பற்றி கிரன் என்ன நினைக்கிறார்?

"கிரன் ஓவர்ஸீஸ் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட் சார்பாக, ஒன்றரைக் கோடி ரூபாய் முதலீடு செய்து, ஹரியானாவில் தோல் பொருள்கள் மற்றும் ஆடைகள் தயாரிக்கும் தொழிற்சாலையொன்றைத் துவங்கியிருக்கிறோம். அதிலிருந்து வெளியாகும் கழிவு நீரைச் சுத்திகரிப்பதற்காக நாற்பது லட்சம் ரூபாய் செலவில் சுத்திகரிப்பு நிலையத்தையும் நிர்மாணித்திருக்கிறோம். ஆக,எங்களால் எப்படி சுற்றுச் சூழல் பாதிக்கும்?

"ஆயினும், தோல் பதனிடும் தொழிற்சாலைகளால் சுற்றுச் சூழல் பாதிக்கப்படுகிறது என்பது உண்மைதான். காரணம், குறைந்தபட்ச முதலீடாக ஐம்பதாயிரம் ரூபாய்ச் செலவிலேயே தோல் பதனிடும் தொழிற்சாலையொன்றை ஏற்படுத்திவிட முடியும். ஆனால், சுத்திகரிப்பு நிலையம் ஒன்றை நிர்மாணிக்க வேண்டுமானால் குறைந்தபட்சம் நாற்பது லட்சம் ரூபாய் செலவு செய்தால்தான் முடியும். அதற்கு அரசு கொடுக்கும் மான்யம் வெறும் நான்கு சதம் மட்டும்தான் என்கிற நிலையில் சிறு முதலீட்டில் தோல் பதனிடுபவர்கள் என்ன செய்ய முடியும்?

"ஆயினும் இப்போது அரசு அந்த மாதிரி முதலீட்டாளர்களையெல்லாம் ஒருங்கிணைத்து, அனைவருக்கும் பொதுவான சுத்திகரிப்பு நிலையங்களை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது!" என்கிறார் கிரன்.

தென்னாட்டிலிருந்து வாங்குவதைவிட, வட மாநிலங்களிலிருந்து தான் தாங்கள் தயாரிக்கும் ஆடைகளுக்கான ஆட்டுத் தோல்களை அதிக அளவில் வாங்குகிறார்களாம். "காரணம், தென் மாநிலங்களில் வளர்க்கப்படும் ஆடுகளின் தோல்கள் நோய்களின் காரணமாகத் தரம் குறைந்திருப்பதுதான்!" என்கிறார் கிரனின் கணவர் ரஞ்ஜீவ் பட்ரா.

"உங்கள் மனைவியும் உங்களைப் போலவே கம்பெனியில் ஒரு டைரக்டர் என்கிற முறையில் வேலை பார்க்கிறார்; ஃபாஷன் டிசைன்கள் செய்கிறார். அதனால், ஒரு மனைவி என்கிற அளவில் அவரால் குடும்பத்தை முழுமையாகப் பராமரிக்க முடிகிறதா?" என்று ரஞ்ஜீவ் பட்ராவிடம் கேட்டபோது, "இதை அவரிடமே கேளுங்களேன்!" என்று கிரனிடமே கைகாட்டிவிட்டார்!

"டிசைனிங் என்பது முழுக்க முழுக்க சிந்தனை சம்பந்தமான விஷயம்தான் என்பதால், நான் முழு நேரமும் ஆபீஸ் போக வேண்டிய அவசியம் இருப்பதில்லை. வீட்டில் சமையல் செய்து கொண்டிருக்கும் போது கூட புதுமையான ஃபாஷன் டிசைன்கள் பற்றியும் என்னால் சிந்திக்க முடிகிறது என்பதால் எனக்கு எந்தப் பிரச்னையும் இருப்பதில்லை!" என்கிறார் திருமதி கிரன்.

— பிரின்ஸ்

# வண்ணத்துப்பூச்சி

## 22

**“உள்ளே வரலாமா?” என்று கதவைத் தள்ளித் திறந்தேன். எந்த மனைவியையும் தீப்பற்றி எரிய வைக்கும் காட்சி அது.**

அர்ஜுன் அடுத்த வாரமும் பம்பாய் போக வேண்டி இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில், இதை விசாரித்துத் தீர்த்து விடலாம் என்று தீர்மானித்தேன். மனசுக்குள் ஒரு முள் போல இருந்தது அந்தச் சந்தேகம். எதற்காக கிரெடிட் கார்டு மூலம் இத்தனை செலவு செய்திருக்கிறார்? எதற்காக என்னிடம் எல்லாம் கம்ப்யூட்டர் தப்பு என்று பொய் சொல்லியிருக்கிறார், என்பதற்குக் கிடைத்த வழக்கமான விடைகளை நான் நம்ப விரும்பவில்லை. அர்ஜுன் வேறு எதற்கோ பொய் ஜோடனை செய்கிறார் என்று உள்ளுணர்வில் தெரிந்தது. அந்த ‘வேறு ஏதோ’ இந்த ரூபத்தில் வரும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை.

கிரெடிட் கார்டின் பெரும்பாலான பில்கள் ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டல் பில்களாக இருந்ததால் ராதாகிருஷ்ணன் சாலையில் ரோட்டை ஒட்டி இருந்த அந்த பெரிய ஓட்டலுக்குப் போனேன். நிறுத்த இடம் போதாமல் தெருவில் வழிந்தன கார்கள். பெரிய தலைப் பாகை போட்டவர் கண்ணாடிக் கதைவைத் திறந்து திறந்து, ஏஸி உள் சுகத்துக்குள் அனுமதித்துப் புன்னகைத்தார்.

நான் முதலில் ‘ரிஸப்ஷன்’ டெஸ்கில் உட்கார்ந்திருந்த சில்க் சுந்தரியிடம் விசாரித்தேன். அவள் தன் எதிரே இருந்த கம்ப்யூட்டரில் எதையோ விரல்களால் வினவி விட்டு, “கிரெடிட் கார்டு டிப்பார்ட்மெண்ட் முதல் மாடியில் ஆர்ட் காலரிக்குப் பக்கத்தில் இருக்கிறது” என்றாள்.

அங்கே அக்கவுண்டண்ட் மானேஜர் தியாகராஜன் என்பவரைச் சந்தித்தேன்.

தியாகராஜன் தாம் படித்த எம்.பி.ஏ.எல்லாம் பயன்படுத்தி என்னைக் குஷிப்பாட்டி உட்காரவைத்து “ஸோ? யு ஆர் மிஸஸ் அர்ஜுன்? அர்ஜுன் எங்கள் வேல்யுபிள் கஸ்டமர். இந்த பில் எல்லாம் அவர் நேரா சைன் பண்ணதுதான் என்று தெரிய வேண்டும். அவ்வளவு தானே?”

தியாகராஜனும் தம் கம்ப்யூட்டரை கேட்டார். “ஆம் அவருடைய பில்கள் தாம். எல்லாம் செட்டில் ஆகிவிட்டதே! வெய்ட் எ மினிட்!” தயக்கம்.

“அர்ஜுன் இங்கே தங்கியிருக்கிறாரே!”

“தங்கியிருக்கிறாரா?”

“ஆம், ரூம் நம்பர் 1112 இன்னும் ‘செக் அவுட்’ ஆகவில்லை என்று கம்ப்யூட்டர் சொல்கிறது.”

“அப்படியா?”என்றேன், உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு.

டெலிபோனை எடுத்து “பேசறீங்களா?” என்றார்.

“இல்லை. நேரில் போய்ச் சந்திக்கிறேன். நான் அவருடைய மனைவி அல்லவா?”

“ட்ரூ! ட்ரூ! எனிதிங்? வேறு எதாவது சேவை?”

இந்த சேவையே போதும் என்று பதினோராவது மாடி பன்னிரண்டாம் எண் அறைக்கு லிப்டில் செல்லும் போது என் மன எண்ணங்களைக் கட்டுப் படுத்தினேன். இதற்கு என்ன அர்த்தம்? பம்பாய் போகிறேன் என்று ஓட்டலில் மறைந்திருக்கிறாரே, என்ன காரணம்? பிஸினஸ் விஷயமாகத் தலைமறைவாக இருக்க வேண்டிய கட்டாயமா? அப்படியானால் போன தடவை கூட பம்பாய் போக வில்லையா? அந்த பாலாமணி சொன்னது நிஜம்தானா? எதற்காகத் தலைமறைவாக இருக்க வேண்டும்?

அங்கே சென்று கதவருகில் இருந்த பொத்தானை அழுத்த,

சுஜாதா

உள்ளே இன்னிசையுடன் கூப்பிட்டது. கதவுக்கு மேல் 'டு நாட் டிஸ்டர்ப்' என்று அட்டை மாட்டியிருந்தது. மறுபடி பொத்தானை அழுத்த சற்று நேரம். ஒரு யுகம் எனக்கு.

கதவு ஒருக்களித்துத் திறக்க, அர்ஜுன் அரை டிராயரில் நின்று கொண்டு கடுங் கோபத்துடன் " ஹூ தி ஹெல்..." என்று சொல்லி முடிப்பதற்குள் என்னைப் பார்த்து "ரே...கா!! நீயா? இங்க எப்படி?"

"உள்ளே வரலாமா?"

அர்ஜுன் கதவை முழுதும் திறக்காமல் கொஞ்ச நேரம் 'லாபி'ல் இரேன்...டிரெஸ் பண்ணிக் கொண்டு..."

"உள்ளே வரலாமா?" என்று கதவைத் தள்ளித் திறந்தேன்.

எந்த மனைவியையும் தீப்பற்றி எரிய வைக்கும் காட்சி அது. படுக்கையில் ஒருபெண் 'ஹூ இஸ் இட் டார்லிங்?' என்று குரல்

# வேட்டை

கொடுத்தாள். பச்சை நிறத்தில் மெலிசாக நைட் டிரஸ் போட்டுக் கொண்டு சோம்பல் முறித்தாள். அறை முழுவதும் அவள் பெண்மைச் சாதனங்கள் ஆரவாரித்தன.

"ரேகா! லுக்! நான் எல்லாத்தையும் விளக்க மாச் சொல்றேன்!"

"மை காட்! விளக்கமா?"

" யார் கண்ணா அது!"

"ஷட் அப்!"

"இதுக்கெல்லாம் ஒரே ஒரு விளக்கம்தான் அர்ஜுன்."

"நான் சொல்றதைக் கேளு. எதும் அவசரமா முடிவு பண்ணிடாதே ரேகா! வீட்டுக்குப் போ. உடனே வரேன்."

"அர்ஜுன் கம்டா! காப்பி ஆறிப் போறதில்லை என்ன இது பாதில!"

இதுவரை நான் பற்பல காரணங்களுக்காகச் சேமித்து வைத்திருந்த கண்ணீர் எல்லாம் ஒரே சமயத்தில் மதகு திறந்தது போல் மார்பில் கொட்டியது.



''ச்சே! கடவுள்தான் உன்னைத் தண்டிக்கணும்!'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டு வந்தேன்.

அர்ஜுன் அரை டிராயரும் வெறும் மார்பும் ஹவாய் சப்பலுமாக என்னை லிப்ட் வரை தொடர்ந்து வந்தபோது ஒரு வெள்ளைக்கார ஜோடி எங்களை விநோதமாகப் பார்க்க, நான் லிப்ட் அருகில் இருந்த 'ஆஷ் டிரே' யை எடுத்து சிகரெட் சாம்பலை அர்ஜுன் முகத்தில் வீசினேன். கண்ணைக் கசக்கிக் கொள்ள காலி லிப்ட் வந்து திறந்து கொண்டது.

அர்ஜுன் அதைத் தடுத்து நிறுத்தி, சொல்றதைக் கேட்டுட்டுப் போ. எங்க போறே! இது ரொம்ப சின்ன விஷயம். பெரிசு பண்ணாதே! ஐம் ஸாரி! ஸாரி! மன்னிப்புக் கேட்டுக்கறேன்'' என்று ஏதேதோ சொன்னார்.

நான் இருக்கப் பிடிக்காமல், அவரைப் பார்க்கப் பிடிக்காமல் லிப்ட் அருகே இருந்த காரிடாரில் நடந்து ஃபயர் எக்ஸிட் என்று அறிவித்த கதவைத் திறந்து ஓடி, சுழல் படிகளில் வெறிப்பிடித்தாற் போல் பதினோரு மாடிகள் இறங்கினேன். கீழே வந்தேன்.

என்ன செய்வது? எங்கே போவது? யாரிடம் முறையிடுவது? எல்லோரும் தெரிந்து வைத்திருந்தார்கள்.

கீதா, ஏன் அர்ஜுனின் அப்பா அம்மாவுக்கு கூட தெரிந்திருந்தாலும் ஆச்சரியமில்லை. உலகமே எனக்கு எதிராகச் செய்த சதி – என்ன செய்வேன் என்று மலைப்பாக இருந்தது. அந்த வீட்டுக்குப் போக மாட்டேன்.

ஆட்டோ ரிக்ஷாவுக்குக் காத்திருந்த போது, அர்ஜுன் அவசரமாகப் பனியன் மாட்டிக் கொண்டு ஓடி வந்து "ஸ்டாப்" என்று கத்தி, கொஞ்ச தூரம் தொடர்ந்தார். எங்கே போவது உடனே யாரைப் பார்ப்பது? கீதாவைப் பார்க்கலாமா கீதாவும் இந்த சதியில் இருப்பாள்! முற்றிலும் அவர்களால் ஏமாற்றப்பட்ட நிலையில் யாரையாவது நிறுத்தி, "அய்யா, என் கதையைக் கேளுங்கள்!" என்று சொல்ல வேண்டும் போல இருந்தது. இல்லை ஏதாவது கோவிலில் போய் உட்கார்ந்து கொள்ளலாம் போல் இருந்தது.

"எங்கம்மா போவணும்?"

"திருவல்லிக்கேணி கோவிலுக்கு போங்க."

**வா**சலில் சின்னதாக ஒரு தேரை அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். செருப்பு வைக்கவும் அர்ச்சனை சாமான்கள் விற்கவும் இருந்த பெண் "வாம்மா மவராசி! தட்டு வாங்கிட்டுப் போம்மா" என்று இடுப்பில் ஒரு குழந்தையும் அருகில் இரண்டு குழந்தைகளுமாகப் பூ தொடுத்துக் கொண்டிருந்தாள். பிராம்மண விதவைகள் தூணுக்குத் தூண் உட்கார்ந்திருந்தார்கள். உள்ளே நுழைந்தேன்.

சன்னிதியில் திரை போட்டிருந்தது. சுற்றி வந்தேன். சலவைக்கல்லில் சகஸ்ர நாமமும் ஆழ்வார் பாசுரங்களும் பொறித்திருந்ததைச் சிரத்தையில்லாமல் படித்தேன். மனத்துக்குள் முந்நூறு எண்ணங்கள் அலைந்தன. எதிர்காலம் என்ன எனக்கு? இந்த சந்தர்ப்பத்தில் நான் எவ்வாறு போராட வேண்டும்? அங்கே ஒரு மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டு உள்ளங்கையைப் பார்த்துக் கொண்டு சோர்ந்திருந்தேன். கண்ணீர் கை ரேகையை அழித்தது. டில்லிக்குக் கடிதம் எழுதினால் அப்பா என்ன சொல்வார்? 'உடனே வந்து விடு, இல்லை நான் வந்து மாட்டரை செட்டில் பண்ணுறேன்' என்பார். அம்மா, 'புருஷான்னா அந்த மாதிரி சபலமா வெளில போற மாதிரி ஏன் நடந்துக்கணும். நீ சாயங்கால வேளையில் தலையை விரிச்சுப் போட்டுண்டு இருப்பாயாம். உன் மாமியார் சொன்னாள்!' என்பாள்.

இப்படி எல்லாவற்றுக்கும் என்னையே தாக்குவாள். காயத்ரி பரவாயில்லை. ஒரு வேளை அங்கு ஆறுதல் பெறலாம். எனக்கு பீச்சில அன்று குறி சொன்ன பெண்ணைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. எவ்வளவு சரியாகச் சொன்னாள்.

எப்படி அவளுக்குத் தெரிந்திருக்கும்? ஒரு வேளை அவள் அம்மனின் ரூபமோ? இப்போது அந்தப் பெண்ணைப் பார்க்கும் ஆவல் கட்டுக் கடங்காததாகி விட்டது. அவளிடம் தான் எனக்கு விடை கிடைக்கப் போகிறது. அவள்தான் வழி சொல்வாள்.

கைப்பையிலிருந்த பணத்தை எண்ணிப் பார்த்தேன். அங்கிருந்து ரிக்ஷா பிடித்து கடற்கரையை நோக்கிச் சென்றேன். ஏறத்தாழ லைட்ஹவுஸ் அருகில் இருந்த பகுதியில்தான் அவளைப் பார்த்ததாக ஞாபகம் இருந்தது. குழந்தைகள் சறுக்கும் பலகைகள், பலூன்



"நம்ம கேடி கண்ணுசாமியோட தாராள மனசு யாருக்கும் வராது!"

"என்ன விஷயம்?"

"ரிடயரான போலீஸ்காரங்களுக்கு மாமூல் கொடுக்க ஒரு அறக்கட்டளை அமைக்கப் போறானாம்!"

– ஞா. ஞானமுத்து

பட்ட விற்பனைகள், மட்டக் குதிரை சவாரி எல்லாம் இருக்குமே—அந்த இடம் ஞாபகம் வந்தது.

பீச்சுக்கு வந்து அந்தப் பெண்ணைத் தேடினேன். பேல் பூரிக்காரரிடம் கேட்டேன்."இங்க ஒரு அம்மா குறி சொல்வாங்களே..."

"மதுரைக்கார அம்மாவா?"

"ஆமாம் ஆமாம்."

"வருவாங்க. இன்னும் வரலை. அங்க சோனக் கொண்டை விக்கறான் பாருங்க அவனுக்கு உறவு."

அங்கே போய் கேட்க "மீனாச்சியா? அது அறுப்பறுக்க ஊருக்குப் போயிருச்சே!"

"குறி சொல்வாங்களே அவங்களா?"

"அவங்கதான்" -

செயலிழந்து மணலில் உட்கார்ந்திருந்தேன். ஆம் அவள்தான். அம்மன் ரூபம்தான் பெயர் கூட மீனாட்சி. சற்று நேரம் மணலில் கோடுகள் வரைந்தேன். கடலோரம் நடந்து அலைகளின் அருகில் நின்றேன்.

சிறுமிகள் பாவாடைகளை சற்றே உயர்த்திக் கொண்டு அலைகளைச் சீண்டி பின் வாங்கி பின் வாங்கி லேசாகக் கால்களை முத்தமிட வைத்து... எத்தனை சந்தோஷம்.

ஒரு பெண்ணுக்கு எந்த வயசில் சந்தோஷம் முற்றும் போடப் படுகிறது. ஏழு எட்டு? பத்து?

என்னைத் தாக்கிய அலைக்கு ஒதுங்காமல் ஆரவாரமாக என்னை அடித்து விட்டுத் திரும்பிப் போகும்போது காலடியில் குழி பறித்தது. வட நாட்டவர்கள் போட்டோ எடுத்தார்கள். காதலர்கள் கட்டிக் கொண்டு அலைகளில் அலைந்தார்கள்.

என்ன வாழ்வு இது? எல்லாமே தற்செயலாகத்தான்! பெண்ணாய்ப் பிறந்தது தற்செயல். டில்லியில் படித்த பாடம் தற்செயல். கல்யாணம் தற்செயல். சென்னை தற்செயல். இந்த துரோகத்தைக் கண்டு பிடித்ததும் தற்செயல்.

உயிர் வாழ்வதன் அர்த்தம் என்பதே விளங்க வில்லை. திரும்ப வீட்டுக்குச் சென்று தான் ஆக வேண்டும். அர்ஜுன் வந்து சமாதானப் படுத்துவார். பேந்தா போல கேட்டுக் கொண்டிருந்து விட்டு, காலம் வழி சொல்லும் என்று அதன் ஆயாசத்துக்குக் காத்திருந்து. அர்ஜுன் இனிமேல் பரஸ்திரீகளைப் பார்க்க மாட்டேன்... இத்யாதி சத்தியங்களை நம்பிவிட்டு மீண்டும் சமையலறை... வாழைக்காயைப் பொடிப் பொடியாக நறுக்கி... எக்ஷாம்பு கண்டிஷனரை போட்டு தலையை ஊற வைத்து...

அந்த வாழ்க்கைக்குத் திரும்ப வேண்டும். ஏன் திரும்ப வேண்டும்? அதோ இருக்கிறதே கடல்!

கடலை நோக்கி நடந்தேன்.

(தொடரும்)

பவித்ரன் தயாரிப்பில், முரளி நடிப்பதாக இருந்த 'பொள்ளாச்சி சந்தையிலே' படம் திடீரென்று நிறுத்தப்பட்டு விட்டது. "பவித்ரன் கேட்ட அளவுக்கு நான் சரியாகத்தான் தேதிகள் கொடுத்திருந்தேன். 'இந்து' சென்சார் பிரச்னையில், இந்தப் படப்பிடிப்புக்கு பவித்ரனால் குறித்த தேதியில் கிளம்ப முடியாததால் நான் தந்த தேதிகளைப் பயன்படுத்தாமல் விட்டு விட்டார்கள். இதற்கிடையே நான் விஜய்காந்தின் சொந்த நிறுவனம் தயாரிக்கும் 'என் ஆசை மச்சானே' படத்திற்குத் தேதிகள் கொடுத்துவிட்டேன். நானும் விஜி சாரும் அண்ணன்-தம்பியாக நடிக்கும் படம். விஜய்காந்த் போன்ற சீனியர் ஆர்டிஸ்டிடம் போய் எனக்காகத் தேதிகளை மாற்றிக் கொள்ளுங்கள் என்று கேட்பது மரியாதையா என்ன? பவித்ரனும் ஒரே ஷெட்யூலில் படத்தை முடித்தால்தான் ஆச்சு என்று நாற்பத்தைந்து நாட்கள் தொடர்ந்து கால்ஷீட் கேட்கிறார். அதனால் நானே பவித்ரனுடன் கலந்து பேசி, 'பொள்ளாச்சி சந்தை'யிலே படத்திலிருந்து விலகி விட்டேன்!" என்று விளக்கம் தந்தார் முரளி.

சரத்குமாருக்கு ஒரு தனி ராசி. ஒரு படம் தகர டப்பாவாக டான்ஸ் ஆடி விட்டாலும், அதே தயாரிப்பாளர் மீண்டும் சரத்குமாரை வைத்துப் படம் எடுக்கத் தயங்குவதே இல்லை. 'கேப்டன்' படம் தமிழிலும், தெலுங்கிலும் பல கோடிகளை விழுங்கி, விநியோகஸ்தருக்குப் பெரிய அளவில் சூடு போட்ட படமாகப் போனாலும், சூப்பர் குட் ஃபிலிம்ஸ் மறுபடி சரத்குமாரை வைத்து இன்னுமொரு பிரம்மாண்டப் படம் தயாரிக்கிறார்கள். படத்திற்கு 'நாட்டாண்மை' என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. ஊர் நாட்டாண்மையாக சரத்குமார் நடிக்க, மூன்று கதாநாயகிகளாம். அப்படியானால் எத்தனை டூயட்டோ!

'தேடு...தேடு..' லயோலாக் கல்லூரி வளாகமே பரபரத்தது- 'முதல் பயணம்'- படப்பிடிப்பில் ஒரே களேபரம். முதல் நாள் படப்பிடிப்பிலிருந்து அன்றைக்கு எடுத்தது வரை, கிட்டத்தட்ட முப்பது நாள் படப்பிடிப்பின் ஃபிலிம் சுருள் அடங்கிய கேமராவை யாரோ அபேஸ் செய்து கொண்டு போய் விட்டார்கள். அதனால் லயோலாவை விட்டு விட்டுத் தம்முடைய லொகேஷனை போலீஸ் ஸ்டேஷனுக்கு மாற்றிக் கொண்டிருக்கிறார் இயக்குநர் ஏ.கே.ரவிவர்மா. படம் பிடிக்க அல்ல; புகார் கொடுக்க!

# காதிக்கு மாதிரி ராஜ்!


• சரத்குமார்

"கதையைக் கூடக் கேட்க வில்லை.

தலைப்பைச் சொன்னதுமே தயாரிப்பாளருக்குப் பிடித்து விட்டது" என்று உளம் மகிழ்ந்தார் விஜய் கிருஷ்ணராஜ். படம்: தாட்பூட் தஞ்சாவூர். கலைகள் செழிக்கும் தஞ்சாவூரில், சாஸ்த்திரீய சங்கீதம் பயிலும் நான்கு ஜோடி இளசுகள், மேலை நாட்டு இசையில் மோகம் கொள் கிறார்கள். இதனால் அடுக்கடுக்காகத் துன்பங்களைச் சந்திக்க நேரிட, கடைசியில் நமது கலாசாரத்தையும், மரபு இசையின் பெருமையையும் உணர்ந்து, மீண்டும் தஞ்சாவூர் மண்ணுக்கே திரும்பு கிறார்கள். பாபுகணேஷ், பிரித்விராஜ், கவுதம், சுபாஸ்ரீ, பிரசன்னா, ரூபஸ்ரீ, கின்னரா, சீமா என்று ஒரு இளைய பட்டாளமே நடிக்கிறது. பாட்டு வாத்தியாராகக் குள்ளக்குடி நடிக்கிறார். பாடல் காசட்டு வெளியீடு செய்த கையோடு, சில காட்சிகளையும் போட்டுக் காட்டினார்கள். ஓர் அம்மன் பாடல் பதினொரு நிமிடம் சுழலு கிறது. டிக்கிலோனா சுபாஸ்ரீயின் ஆட்டம் இப்போதே தலையைச் சுழல வைக்கிறது.

- ஹர்ஷராஜ்

• சுபாஸ்ரீ: தலையைச் சுழல வைக்கிறார்.



• முரளி

# அனுபவம் பேசுகிறது

நடவுவேலை முடிந்து, ஆட்கள் ஒவ்வொருவராக மேடேறத் தொடங்கிய போது, பொழுது சாய்ந்திருந்தது. எப்போதும், சிரிப்பும் கும்மாளியுமாக இருக்கும் நடவாட்கள், அன்று அமைதியாக இருந்தனர். அதன் காரணம், 'பெரியய்யா' என்று அழைக்கப்படும் பெரியவர் ரங்கசாமி அங்கே இருந்தது தான். 'எல்லோரும் மசமசன்னு நிக்காம, கூலி வாங்கறதுக்கு வரிசையில வந்து நில்லுங்கப்பா! பெரியய்யா காத்திருக்காங்கல்ல !' என்று சின்னான் குரல் கொடுத்தான். உடனே பெரியவர் அமர்ந்திருந்த கயிற்றுக் கட்டிலுக்கு அருகே ஒரு ஒழுங்கற்ற வரிசை உருவானது.

தன் மடியில் இருந்த பணத்தை எண்ணி எண்ணி தனக்கு முன்னே நீண்ட கரங்களில் அவர் போடத் தொடங்கியபோது வேக வேகமாக வந்த பொன்னன், 'எசமான்! பட்டணத்திலிருந்து சின்னய்யா வந்திருக்காருங்க! அம்மா உங்களை வெள்ளென வர சொன்னாங்க' என்று மூச்சிரைத்தபடி சொன்னான்.

'அப்படியா' என்று நெற்றியை சுருக்கியவர் 'எலேய் சின்னான் ! கூலியை பட்டுவாடா பண்ணிட்டு வீட்டு பக்கமா வா! நான் முன்ன கிளம்பறேன்' என்று புறப்பட்டார்.

முருகேசன்... அவரது ஒரே மகன். நன்றாக படித்து இப்போது சென்னையில் பெரிய பொறுப்பில் இருக்கிறான். ஒவ்வொரு முறை ஊருக்கு வரும்போதும் பெற்றவர்களை தன்னோடு வந்து விடுமாறு அவன் அழைப்பதும், விவசாயத்தை விட்டு வீட்டு வர முடியாது என்று இவர் மறுப்பதும், வாடிக்கையாக நடப்பவை.

'வாப்பா முருகேசு! எப்ப வந்தே' என்ற குரல் கேட்டு, பணிவாக எழுந்துநின்ற மகனை பார்த்து 'மருமக வரலையா? என்று வாஞ்சையோடு விசாரித்தார். 'இல்லீங்கப்பா நான் மட்டும் தான் வந்தேன்' என்றவனிடம் 'எல்லாரும் சவுகரியந்தானே' என்று கேட்டபடியே ஊஞ்சலில் உட்கார்ந்தார் ரங்கசாமி !

'சவுகரியந்தாம்பா ! நான் தான் ஒரு விஷயமா யோசனை கேட்டுட்டு போலாம்னு வந்தேன்.' என்றதும் என்ன விஷயம் என்று கேட்பது போல ஏறிட்டு பார்த்தார்.

'கையில இப்ப கொஞ்சம் பணம் சேர்ந்திருக்குது. அதை பயனுள்ள முறையில முதலீடு செய்யலாம்னு நனைச்சேன். அப்பதான் கூட வேலை பார்க்கிறவங்க, அனுபவ் தேக்கு பண்ணைகளை பற்றி நிறைய சொன்னாங்க. அதுல முதலீடு செய்யலாம்னு யோசனை. எதுக்கும், உங்களைக் கேட்டுட்டு முடிவு செய்யலாம்னு வந்தேன்' என்றான்.

தேக்கின் பெயரைக் கேட்டதும், பெரியவரின் முகம் பிரகாசமானது. உற்சாகத்தோடு சொல்லத் தொடங்கினார். 'முருகேசு, ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க ! நானும் நாப்பது வருசமா பார்க்கிறேன். என் அனுபவத்தில, தேக்கு மரம் எப்பவும் தேவைப்படற ஒண்ணு. அதுவும் வர்ற நாட்களில தேக்கோட மதிப்பு அதிகமாயிட்டே போகும். அனுபவ் தேக்கு



பண்ணைகளைப் பத்தி நானும் கேள்வி பட்டிருக்கேன். தேக்கு மரம் நல்லா விளையற இடங்களா பார்த்துதான் தேக்கு பண்ணைகளை அமைச்சிருக்காங்க. ரொம்ப நவீனமான விவசாய முறைகளை எல்லாம் பயன்படுத்தறாங்க. இருபது வருஷம் கழிச்சி 1440 கன அடி தேக்குக்கு உத்திரவாதம் உண்டாம். அதோட மதிப்பே பல இலட்சங்களுக்கு குறையாம இருக்குமே' என்றதும் முருகேசன் நம்பிக்கையோடு பேசத் தொடங்கினான்.

'அது மட்டும் இல்லப்பா! முதலீடு பண்ணினதும் தேக்கு வளர்ற நிலமும், நமக்கே சொந்தமாயிடுது. ஆறாவது, பன்னிரண்டாவது வருஷங்களில இடைக்கால வருமானமும் கிடைக்குமாம். இதுவரைக்கும் 12,000 பேர் அனுபவ் தேக்குப் பண்ணைகளிலே முதலீடு செய்திருக்காங்க' என்றான்.

அப்புறம் என்னப்பா யோசனை? நீ எடுத்த முடிவு சரிதான்! நல்ல படியா முதலீடு பண்ணு! எப்படியோ... நீயும், நேரடியா இல்லாட்டியும், அனுபவ் மூலமாகவாவது விவசாயத்துக்கு வர்றியே! ரொம்ப சந்தோஷம்...!' என்றார் ரங்கசாமி.

அவரது குரலில் இருந்த மகிழ்ச்சியில், விவசாயத்தின் மீது அவருக்கு இருக்கும் பிடிப்பு மட்டுமின்றி மகனின் மீது இருக்கும் வாஞ்சையும் வெளிப்பட்டது.

கதாசிரியர் குறிப்பு : இது போன்ற இன்னும் பல அனுபவங்களை அறிய, தொடர்பு கொள்ளுங்கள் :

அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிமிடெட்
11, சோமசுந்தரம் தெரு, தி.நகர்,
சென்னை 600 017.
தொ.பே. 8254155, 8282833, 8283316, 8282829
ஃபேக்ஸ் : 044-8284967

கிளைகள் : மதுரை : 119, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, 2வது மாடி, மதுரை 625 001. திருச்சி : ஜென்னி பிளாசா, 5, பாரதியார் சாலை, திருச்சி 621 001. சேலம் : சேலம் பிளாசா (சாரதா காலேஜ் எதிரில்), பேர்லான்ட்ஸ், சேலம் 636 016. கோவை : 101-105, D.B. ரோடு, R.S. புரம், கோவை 641 002. வேலூர் : 8, ராமகிருஷ்ணபுரம், கொசப்பேட்டை, வேலூர் 632 001. திருநெல்வேலி : 49C / 11, பாவா பில்டிங், கைலாசபுரம் வடக்கு தெரு, நெல்லை ஜங்க்ஷன் நெல்லை 627 001.

ADVT.

பிரகாஷ் நிஷாவை என்ன காரணமாகப் பார்த்தான் என்று அவனுக்கே தெரியாது. ஆனால் டி.எஸ்.பி. ராஜேந்திரவர்மா அவனுடைய அளவுக்கு அதிகமான மிரட்சியினைக் குறிப்பெடுத்து, மனசுக்குள் சிரித்துக் கொண்டார்.

"மிஸ்டர் பிரகாஷ்! நீங்க பயப்படத் தேவையில்லைன்னு நான் நினைக்கிறேன். நீங்க தப்பு எதுவும் பண்ணியிருந்தா எங்ககிட்டே யிருந்து விடுபட்டு விலகிப் போக முடியாது! விடமாட்டோம். தப்புச் செய்யலேன்னா பயப்படத் தேவையில்லை. நான் கேட்கிறதுக்குத் தெளிவா பொய் புகுத்தாமல் பதில் சொல்லிட்டா நல்லது."

"சார்... நான் ஒரு தப்பும் செய்யலை. எப்படியோ இந்த மர்மச் சூழலிலே சிக்கிட்டேன்" என்று கூறி மறுபடி நிஷாவைப் பார்த்தான். அவள் அவனுக்கு ஆதரவாகக் கண் இமைகளைச் சிமிட்டியது தென்பாக இருந்தது.

"சரி, நேற்று உங்களைக் கம்பெனியிலிருந்து எங்கே அனுப்பினாங்க?"

"ஹோட்டல் பானுவுக்கு."

"என்ன விஷயமா?"

# 8

# நாகமணி நகரம்

"அங்கே... என்னோட பாஸ் பாமேலா எனக்காகக் காத்திருந்தார். இருவரும் புறப்பட்டு காட்கோபர், குர்லா வழியாக கஸ்டமர்களைப் பார்த்துவிட்டு மீண்டும் ஆபீஸ் வந்துட்டோம்..."

"துப்பாக்கி சூடு நடந்த இடத்துல உங்ககிட்ட அந்த ஆசாமி எவ்வளவு நேரம் நின்றிருப்பான்?"

"அஞ்சு நிமிஷம் இருக்கலாம்."

"அந்த ஆள் உங்ககிட்ட ஏதாவது பேசினானா?"

"பேசினான்."

டி.எஸ்.பி. சடாரென இன்ஸ்பெக்டரை நோக்கினார். ஏற்கெனவே விசாரணையில், "அவன் என்னிடம் பேசவில்லை" என்றவன் இப்போது ரிவர்ஸில் வருகிறானே என வியந்தார்.

"என்ன பேசினான்?" டி.எஸ்.பி. சூடு குறைய விடவில்லை.

"ஷ்யாம்சுந்தர்னு ஒரு ஆள் கொஞ்ச தூரத்தில் காத்திருக்கிறதாகவும் என்னை அழைப்பதாகவும் சொன்னான்."

"நீங்க என்ன பண்ணினீங்க?"

"சார்... இந்த இடத்தில் உங்களுக்குச் சில உண்மைகளைச் சொல்லணும்."

"சில இல்லே, எல்லாமே உண்மைகளா இருப்பது நல்லது."

"ஷ்யாம்சுந்தர் என்கிறவனை எனக்கு ஏற்கெனவே தெரியும். நான் இந்த ஷில்பா கம்பெனியில் சேர்ந்த அன்றே என்னைப் பின் தொடர்ந்து அவனாகவே பேசினான். அவன் ஒரு திட்டம் வைத்துள்ளதாகவும், அதன்படி நான் அவனுக்கு உதவினால் பணம் கிடைக்கும்னும் சொன்னான்."

"நீங்க என்ன சொன்னீங்க?"

"நான் அவனோட திட்டத்துக்கு ஒத்துக் கொள்ளலை. ஆளை விடுன்னு ஒதுங்கிப் போனேன். ஆனால், மறுநாளும் என்னை வி.டி. ஸ்டேஷனில் வைத்து அணுகினான். அப்போது இந்த கோகுலை அறிமுகப்படுத்தினான். அவனோட திட்டப்படி கோகுல் என்னை அடிக்கடி கண்டும் காணாமலும் பொது இடங்கள்ல சந்திப்பான். ஷில்பா நிறுவனம், ஏஜென்சி ஆசாமிகளுக்கு என் மூலம் கொடுத்து அனுப்பும் மாலை மாற்றிடணும். அவன் தரும் பெட்டியை நான் எடுத்துக்கிட்டு என் வசமுள்ளதை அவனிடம் தந்துடணும்."

"அந்த மால் என்னது?"

" 'நேச்சுரோ'ன்னு பெயர். ஒரு எக்ஸ்பெர்

வெஸெண்ட் பவுடர். தண்ணீரைக் கலந்ததும் சோடா மாதிரி குபுகுபுன்னு பொங்கும்."

"எப்படி பேக் பண்ணி விக்கறீங்க?"

"மூணு அங்குலத்துக்கு ரெண்டு அங்குலம் டப்பியில் வைச்சுக் கொடுக்கறோம்."

"அதை வாங்கி அவன் என்ன பண்ணுவான்?"

"அதை என்னிடம் சொல்லலை."

"உங்களுக்கு என்ன தருவேன்னு சொன்னான்?"

"பணம்."

"எவ்வளவு?"

"எவ்வளவுன்னு சொல்லலை. ஆனா கணிசமா இருக்கும்கிற மாதிரி ஆசை காட்டினான்."

கேஸிலிருந்து நழுவினது அவனுக்கு வியப்பாய் இருந்தது. ஸ்டேஷன்விட்டு வரும்போது ரைஃபிள் உயர்த்தி வைத்திருந்த கான்ஸ்டபிள்கள் முன்பு, தைரியமாக நிஷாவின் தோள்களில் கைபோட்டான். அந்த ஆண் மகனின் விசித்திர வீரம் அவளுக்கும் வேண்டியதாகவே இருந்தது. அவனுடைய கையை அவள் விலக்கவில்லை. பிரகாஷ் ஏதோ ஒரு ஜோக் சொல்லிச் சிரிக்க, அதன் ஹாஸ்யம் விளங்காமலேயே நிஷாவும் சிரித்தாள்.

டெபுடி கமிஷனர் ராஜேந்திரவர்மாவிடம் இன்ஸ்பெக்டர் ஹனுமந்த்குமார் ஏராளமான நெற்றிச் சுருக்கங்களோடு புலம்பினார்.



"பிரகாஷ். நான் உங்களை நம்பறேன். நீங்க சொன்னது எல்லாம் எனக்கு நிஜமாகவே படுது. நீங்க போகலாம். தேவைப்பட்டால் மறுபடி விசாரணை செய்வோம்."

"தாராளமா..." என்றான் பயம் துறந்தவனாக.

இவ்வளவு சுலபமாகத் தான்

**பெனிட்டோ குமார்**

"சார்... இவனை ஏன் விட்டுட்டீங்க?"

"காரணமாத்தான்..."

"தப்பு சார்... இவன் பின்னால கொலையோட மர்மம் ஒளிஞ்சிருக்கு. முதல்ல எங்கிட்டம் ஒண்ணுமே தெரியாதுன்னு சொன்னான். இப்போ... ஷ்யாம்சுந்தர் பற்றி நிறையச் சொல்றான். கேள்வி கேட்கிறதைவிட... உள்ளே போட்டு இருட்டறையிலே நம்ம வழக்கமான கவனிப்பைக் கொடுத்தால் வழிக்கு வந்துடுவான்."

"வேண்டாம் ஹனுமந்த்குமார். இரண்டே நாள் டைம் கொடுங்க. இவனை அவன்

போக்கிலேயே விட்டா, இவன் வழியா ஒரு கூட்டமே அமுக்கப்படும்."

இன்ஸ்பெக்டர் ஹனுமந்த்குமார் தாம் கட்டிப் போடப்பட்டது போல் உணர்ந்தார்.

நண்பகல் வேளையில் மாதுங்கா ப்ளாட்டுக்கு வந்தார்கள் பிரகாஷும் நிஷாவும். வீட்டினுள் நுழைந்தவுடனேயே அவளைக் கட்டிப் பிடித்துத் தரையை விட்டுத் தூக்கினான் பிரகாஷ். உல்லாசமானாள் நிஷா.

"அப்பா, அம்மா இல்லை என்றவுடன் ரொம்பத்தான் தைரியம்!"

"ஐயோ... கேஸில் அகப்படாமல் தப்பிட்டேனில்லையா... அதான்!"

"என்னைக் கேட்டால் நீ இன்னும் தப்பிக்கலேன்னுதான் சொல்வேன் பிரகாஷ்!"

"எப்படி?"

"அன்னிக்கு நீ ஒரு ஃபைல் பார்த்தாயே..."

"அந்த ஹைட்ரோக்ளோரைடு விவகாரம் தானே?"

"அதேதான்... அதைப் போலீஸ்கிட்டே மறைச்சுட்டியே பிரகாஷ்!"

"அதைச் சொல்ல வேண்டிய தேவை இல்லையே நிஷா! பி சியர்புல் யார்! 'ப்ரெட்டி வுமன்' போடறேன், பார்ப்போம்."

வி. ஸி.ஆர். தட்டி, கேஸட் போட்டுப் படம் பார்த்தார்கள். நிறையத் தடவை நிஷாவைத் தொட்டான் பிரகாஷ்.

மறுநாள், புறநகர் ரயிலேறி, வி. டி. ஸ்டேஷனில் இறங்கி வெளியே வந்து, ஆட்டோ கிடைக்காமல் டாக்ஸி நாடினான். அப்போது இளம் பச்சைக் கலரில் ஒரு அம்பாசிடர் அவன் அருகில் வந்து நின்றது. "கல்பா தேவி ரோடு, டாக்ஸி சார்ஜ்" என்று டிரைவர் கூற உடனே சந்தோஷமாகப் பின் இருக்கையில் கதவு திறந்து ஏறிக் கொண்டான். கார் புறப்பட்டு வேகம் கொண்ட பிறகுதான் அருகில் இருந்த நபரைக் கண்டு அதிர்ந்தான். ஷ்யாம்சுந்தர்!

"என்ன பிரகாஷ்... எதிர்பார்க்கலை, இல்லியா?"

"என்னை... என்ன செய்யப் போறே?"

"நிச்சயம் கொலை செய்ய மாட்டேன். காரணம், உன்னோட சேவை எனக்குத் தேவை. பிரகாஷ்... நீ ஒரு பொன்முட்டை இடும் வாத்து... பிரின்ஸஸ் ஸ்ட்ரீட்மே ஜாவோ!" என்றான் டிரைவரிடம்.

பிரகாஷ் கொஞ்சமாகப் பயந்தான் என்று சொல்ல முடியாது. அவன் பக்பக் இதயம் உடல் முழுவதும் பரவியிருப்பது போல் உணர்ந்தான். 'ஷ்யாம்சுந்தர் என்பவன் ஒரு தனிப்பட்ட நபரா, அல்லது குழு ஒன்றின் அங்கத்தினனா?'

பிரின்ஸஸ் ஸ்ட்ரீட் விளிம்பிற்கு வந்து செர்னி ரோட்டில் நுழைந்து, ஒரு வளைவான சந்தில் கார் நின்றது. ஷ்யாம்சுந்தர் வெடுக்கெனக் காரைவிட்டு வெளியே வந்து பிரகாஷை வரவேற்றான். ராஜா வீட்டுக் கன்றுக் குட்டிபோல் அவனைக் கட்டடத்துக்குள் அழைத்துப் போனான். இரண்டு கூட்டங்கள் ரம்மி ஆடிக் கொண்டிருந்தன. அனைவருமே க்ரைம் எழுத்தாளர்களின் கற்பனையில் வரும் பயங்கரமான வில்லன்கள் போலிருந்தார்கள்.

பார் போன்ற இருட்டான லாமினேட்டட் அறைக்குள் கடைசியாக இருவரும் நுழைந்தார்கள். வோல்டேஜ் பற்றாக்குறையால் ஒரு பல்பு அழுது கொண்டிருந்தது.

"பிரகாஷ்... எனக்கு ஒரு உண்மை தெரியணும்."

"என்ன உண்மை...?"

"கோகுலைக் கொன்றவன் யார்?"

"தெரியாது."

"சுட்டவன் மேம்பாலத்திலிருந்து சுட்டு விட்டு ஓடிட்டான்... அப்படித்தானே?"

"ஆமா..."

"பிரகாஷ்... கோகுல் செத்தது எனக்கு அவ்வளவா பெரிய இழப்பு இல்லை. ஆனா, அவனைத் தொட்டவன் என்னையும் தொட ஆரம்பிப்பான். என்னோட திட்டம் எப்படியோ லீக் ஆகிட்டுது!"

"மிஸ்டர் ஷ்யாம்சுந்தர்... உங்களோட திட்டம் எதுவும் எனக்குப் பிடிபடலை. கோகுல் என் முன்னாடி சுடப்பட்டான். அந்த ஒரு விஷயம் - சம்பவம் தவிர எனக்கு எதுவுமே தெரியாது."

"போகட்டும், நம்ம திட்டம் எந்த நிலையில் இருக்கு?"

"ஏற்கெனவே சொன்னதுதான். நான் ஒப்புக் கொள்ளலை."

"பிரகாஷ்.. உனக்கு இது முதலும் கடைசியுமான எச்சரிக்கை. என்னோட திட்டத்துக்கு நீ ஒத்துவரலைன்னா சின்னாபின்னமாயிடுவாய்."

பிரகாஷ் எதுவும் பேசாமல் லேமினேட்டட் மேஜையைச் சுரண்டிக் கொண்டிருந்தான்.

"பிரகாஷ்... என்னோட தீவிரம் உனக்கு விளங்கலை. அடுத்த தடவை என்னோட திட்டத்துக்கு நீ தோப்புக்கரணம் போடலை... உன் உடல் ஏதோ ஒரு பீச்ல கிடக்கும். செளபாத்தியா, ஜுஹுவா தெரியாது. இப்போ நீ போகலாம்."

இந்தச் சொல்லுக்காகவே காத்திருந்தவனாக எழுந்து நடக்கலானான் பிரகாஷ். மெயின் ரோடுக்கு வந்து சேர்ந்ததும், 'என்னுடைய தினசரி வாழ்க்கையில் முடிச்சு முடிச்சாக ஏன் விழுகிறது?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அவனால் நிதானமாக யோசனை செய்து ஒரு முடிவைக் காண இயலவில்லை.



"ஓட்டுப் பதிவு துவங்கி இரண்டு மணி நேரமாச்சு; ஒரு பெண் வாக்காளர் கூட வந்து ஓட்டுப் போடலையே!"

"ஓட்டுப் பதிவை வீடியோ எடுக்கறதா செய்தி வந்ததே. இன்னமும் அலங்காரம் முடியலை!"

- லலிதா செல்லப்பா

---

ஆட்டோ அமர்த்தி அலுவலகம் வந்து சேர்ந்தபோது நேரம் பதினொன்று என்று ரீட்டா கைக்கடிகாரம் காட்டிச் சிரித்தாள். இவன் இருந்த தர்மசங்கட நிலையில் பாக்ய ராஜ் பாணியில் சிரித்து, கொஞ்சமாக அசடு வழிந்தான்.

சேல்ஸ் கேபின் வந்து ஏ. சி. குளிரை உணர ஆரம்பித்த மறுகணமே, "சார்... உங்களை பாலேகர் ஸாஹிப் கூப்பிடறார்" என்று வந்து சொன்னான் பியூன்.

முடியைக் கோதிவிட்டுக் கொண்டு போனான்.

"உட்கார்..." என்றார் பாலேகர். "போலீஸில் என்ன சொன்னாய்?" – கேட்டார்.

"சில மறைக்கப்பட்ட உண்மைகளை" என்றவன் தொடர்ந்து ஷ்யாம்சுந்தர், கோகுல் என அனைத்து விவகாரங்களையும் கூறினான். மிகப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்தார் பாலேகர். அதன் பிற்பாடு பேசினார்:

"பிரகாஷ்... நான் உன்னை வேலையில் சேர்த்த அன்றே சொன்னேன், 'பிரமாதமா, கெட்டிக்காரத்தனமா வேலை செய்யக்கூட வேண்டாம்; வம்புல மாட்டாமலிருந்தாலே போதும். விசுவாசமான ஆசாமிதான் வேணும்'னு. கெடுத்துட்டியே..."

"சாரி சார்...!"

"போகட்டும் இப்பவாவது உண்மையைச் சொன்னாயே... எல்லாம் போலீஸ்கிட்டே சொன்னதே நல்லது. நானும் உனக்குச் சில உண்மைகளைச் சொல்லிடறேன். இந்த ஷ்யாம்சுந்தர் எய்ட்டி நைன்ல நம்ப கம்பெனியிலேயே ரெப்ரெசென்டேடிவ்வா இருந்தான். மால் மாற்றிக் கொடுத்து கம்பெனியோட பெயரையே கெடுத்துட்டான்."

"சார்... எனக்கு ஒரு சந்தேகம்... நம்ம மாலை மாற்றிக்கிட்டுப் போய் அப்படி என்ன பிரமாதமா சம்பாதிக்க முடியும்?"

"அப்படிக் கேள்! 'நேச்சுரோலக்ஸ்'ஸ்னு கான்செப்ட் பார்மசூடிகல்ஸ்காரங்க தயாரிக்கறாங்க. அவங்க நம்மோட தயாரிப்புக்குப் போட்டி. அவங்களோட கைப்பாவையா ஆயிட்டான் ஷ்யாம்சுந்தர். ஒரிஜினல் மாலை அவன்கிட்ட வாங்கிக்கிட்டு தரக் குறைவான மாலை அவன் தலையில் கட்டுவாங்க. நம்ம கஸ்டமர்கிட்டே போய்ச் சேரும். ஆட்டோ மாடிக்கா மார்க்கெட் டவுன். அதே திட்டத்தைத்தான் உன்கிட்டயும் கையாள நினைச்சிருக்காங்க."

"கரெக்ட் சார்... அவன் ஒளிவுமறைவா சொன்னான். எனக்குத்தான் ஒரே குழப்பம். இப்பத்தான் புரிஞ்சுது!"

"நல்லது! இனிமே உன்னை ஷ்யாம்சுந்தர் அணுகினால்... நேரே போலீஸுக்குப் போவோம்" என்றார் பாலேகர்.

மாலையில் ஆபீசில் பாலேகர் இல்லை. அஜய்யும் இல்லை. இருவரும் ஏதோ காரியமாகப் போயிருந்தார்கள். அப்போது பிரகாஷுக்கு மெல்லியதாக ஒரு ஜுரம் வந்தது. அந்த ஹைட்ரோக்ளோரைடு பற்றிய ஃபைலை எடுத்து, முழு உள்ளடக்கத்தையும் படித்துவிட வேண்டும் என்ற ஜுரம்.

கிளம்பினான். அஜய் கேபின் சாவி ரீட்டாவிடம் இருந்தது. ஆறு மணிக்குத்தான் செக்யூரிட்டி நபர்களிடம் போகும்.

"ரீட்டா, அஜய் கேபின் சாவி வேண்டும்."

"எதுக்கு?"

"நேற்று என்னோட நாவல் உள்ளே அகப்பட்டுக்கிட்டது."

"ஓட்லும் நாவலா? பாதிலே நிறுத்தியிருந்தா தலை குடையுமே!" சிரித்தபடி சாவியைக் கொடுத்தாள்.

கேபினைத் திறந்து உள்ளே புகுந்து கொண்டான். அந்த மூன்றாவது டிராயரைத் திறந்தான். அங்கே இல்லை. எங்கே இருக்கும்? தேடினான். 'கண்டுபிடிக்காமல் விடுவதில்லை' என்று கங்கணம் கட்டிக் கொண்டு இண்டு இடுக்கு விடாமல் தேடினான்.

கடைசியில் ஒரு பாக்ஸ் ஃபைலின் ஊடேயிருந்து விழுந்தது. ஆர்வத்தோடு திறந்தான். முதல் பக்கத்தில் புதிதாக ஒரு போட்டோ. ஷ்யாம்சுந்தரின் போட்டோ. போட்டோவின் மையமாகத் தப்புக் குறி சிவப்புக் கலரில் போடப்பட்டிருந்தது. பின்பக்கம் திருப்பிப் பார்த்தான். மீண்டும் முன்பக்கம் வந்தான்.

தப்புக் குறி! 'ஷ்யாம்சுந்தரைக் கொல்லப் போகிறார்களா, என்ன?'

(தொடரும்)



"புறம்போக்கு நிலத்தை வளைச்சுப் போட்டு, தான் அனுபவிக்கணும்கிற எண்ணமே இல்லாதவர்ங்க எங்க தலைவர்!"

"ஏன், உடனுக்குடன் பிளாட் போட்டு அடுத்தவங்களுக்கு வித்துடுவாரா?"

- வேதபுரி எஸ். ரமேஷ்

"அந்த வீட்டுக்குத் திருடப் போகலாம்னு சொன்னீங்களே... இப்ப ஏன் வேண்டாம்னு சொல்றீங்க?"

"ரொம்பப் பாவம்பா. இப்பத்தான் மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வந்துட்டுப் போயிருக்காங்க!"

- கே. வி.

"எங்க ஊர்ல கொலை கொள்ளை, கற்பழிப்பு... எதுவுமே கிடையாது."

"அதான் போலீஸ் ஸ்டேஷனே இல்லேன்னு சொல்லிட்டீங்களே!"

- சீர்காழி வி. ரேவதி

"நேத்து கூட்டத்துலே தலைவர் உருக்கமா பேசிட்டாராமே?"

"ஆமாம். டாக்டர் பட்டம் தரலேன்னாக் கூட பரவாயில்லை. எனக்கொரு இஞ்சினியர் பட்டமாவது தரக்கூடாதான்னு கதறிட்டார்!"

- கொங்கணாபுரம் வே. செந்தில்

"அந்த போலீஸ்காரர் ஏன் திருடன் காலிலே போய் விழுறார்...?"

"அவன் 'திருந்தி வாழப் போறேன்'னு சொன்னானாம்...!"

- ஆர். உமா



## வட்டமேஜை

♦'புறப்புழுக்கத்தைப் போக்க பவுடர் உறை முதல் பக்கத்தில்; மனப் புழுக்கத்தைத் தீர்க்க மகானின் உரை நடுப் பக்கத்தில்; இரண்டையும் பெற்ற நான் இப்போது இன்பத்தின் பக்கத்தில்!

பொன்மலை, ஆர்.பிரகாஷ்.

♦காய்கறிகள் வாங்குவதற்கு, ஏர்கண்டிஷன்ட் ஷாப்பில் கம்ப்யூட்டர் பில்லா? ...ம் காலம் ரொம்பவும்தான் மாறிப்போச்சுங்க!

கவுந்தப்பாடி, த.குணசேகரன்.

♦ சினிமா ஷூட்டிங்கைப் பார்த்து விட்டு வீட்டுக்கு வந்த உணர்வை ஏற்படுத்திய வித்தியாசமான சிறுகதை, "வெள்ளித் திரையில் காணத் தவறாதீர்." படிக்க விறு விறுப்பாக இருந்தது.

அயன்புரம், த.சத்தியநாராயணன்.

♦ வருமுன் காப்பதே அரசின் கடமை; வந்தபின் ஆறுதல், பணம், உதவி எல்லாம் தன் விளம்பர மேம்பாட்டுக்கே. சோகத்திலும் சுகம் காணும் அரசுக்குத் தங்களின், 'படகில் எமன்' தலையங்கம், சிந்தனையைத் தூண்டி பொறுப்பாய் ஆட்சி செய்ய வழி வகுத்தால் வெற்றி நமக்கே!

மதுரை-16, எல்.எம்.மங்கை.

♦'படுகாயத்திற்குப் பத்தாயிரம்! மரணமெனில் ஐம்பதாயிரம்!" என்று 'ரேட்' நிர்ணயித்து விட்ட இந்த அரசு, இனியும் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய அலட்சியம் காட்டும் எனில், இந்த விபரீதக் கொடுமைகளுக்கு, என்றுமே முடிவிருக்காதுதான்!

சிதம்பரம், டி.ஆர்.விஸ்டாலின்.

♦நாளொரு கொலையும் பொழுதொரு கொள்ளையும் நடந்து கொண்டுதானே இருக்கிறது என அசிரத்தையாக இராமல் கட்டாவ் மில் அதிபரின் கொலையை அரசின் கவனத்திற்குக் கொண்டு வந்த விதம் பாராட்டுக்குரியது.

சேலம்-6. பொன்.குமார்.

♦ச்சே! வெறுத்துப் போயிட்டேன் வாத்யாரே, உங்க ஆனஸ்ட் ராஜ் விமர்சனம் பார்த்து. 'விஜய்காந்த் படத்திலா இப்படி?' என ஆண்களே நெளியும்படி அம்மணியோடு விளையாடியிருக்கிறாரே மனுஷர். உம்ம விமர்சனத்தில் இதை ஒரு பிடிபிடிப்பீர் என நம்பிக்கையோடு பார்த்தால்... ஏமாத்திட்டீங்களே!

சேலம் - 1, கே.ராஜபாலு.

♦இன்றைய இயந்திர உலகில் தினமும் தியானம் செய்ய நினைத்து மனத்தை ஒருமுகப்படுத்த முயன்றால் அதனைத் தகர்த்திடும் ஓராயிரம் பிரச்னைகளை மிக அழகாகச் சித்திரித்துள்ளார் சத்யா. பாராட்டுக்கள்!

திருச்சி - 5, தமிழ்நாசன்.

♦"கே.கந்தவேலின் ஏமாந்தவன்" சிறுகதை ஒரு சிறந்த கதை. நூறு ரூபாயை நேர்மையற்ற முறையில் தன்னிடம் வைத்துக் கொண்டவன் பேங்க் பணத்திலும் கை வச்சாலும் வைப்பான் என்று வசந்தியின் தந்தை சந்தேகப்பட்டதிலும் நியாயம் இருக்கத்தான் செய்தது.

கோயமுத்தூர், கோ.கல்யாணசுந்தரம்.

♦"ஹரி ஜனங்களை 'ஜெ' ஜனங்கள் என்று அழைக்க வேண்டும்" என்று குறிப்பிட்ட அ.தி.மு.க. எம்.எல்.ஏ.நான்தான். (தராசு பதில்கள்-22.5.94 இதழ்.) எனக்குத் தெரிந்த வரை எத்தனையோ முதல்வர்கள் தமிழகத்தை ஆண்டபோதிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இன்றைய முதல்வர் செய்துள்ளது போன்ற நற்பணிகளை வேறு யாரும் செய்தது இல்லை. அப்படி பார்க்கும்போது, எங்களுக்கு இன்றைய முதல்வர் தெய்வமாகவே தெரிகிறார். எனவே, காந்திஜி, "ஹரிஜனங்கள்" என்று சொன்னதற்கும் நாங்கள் "ஜெ ஜனங்கள்" என்று குறிப்பிடுவதற்கும் எங்களைப் பொருத்தமட்டில் வித்தியாசம் ஏதுமில்லை.

வ.ஆ.அம்பேத்கர்(மாவ),

டாக்டர் ஜெ.பரந்தாமன்,
பேர்ணாம்பட்டு தொகுதி எம்.எல்.ஏ.

♦கலைஞர் ஆட்சியில் புல்லுக்கும் நெல்லுக்கும் "பத்மா, கருணா" என்று பெயர் சூட்டப்பட்டது பற்றிய கேள்வியைச் சற்றே ஆராய்ந்திருந்தால், "பத்மா" என்பது கலைஞருடன் எவ்விதத்திலும் தொடர்புடைய பெயர் அல்ல என்பதையும், பத்மநாபன் என்ற விஞ்ஞானியைக் குறிக்கும் என்பதையும், அவர் உருவாக்கிய நெல்ரகத்துக்கு அப்பெயர் பக்தவத்சலம் காலத்திலேயே சூட்டப்பட்டது என்பதையும் தராசு புரிந்து கொண்டு அதற்கேற்பப் பதிலளித்து இருக்கலாமே!

சென்னை, கல்கிஅன்பன்.

"அந்த அ.தி.மு.க. எம்.எல்.ஏ. நான் தான்!"



• சிகரமான தொண்டு



• "கலைக்கமாட்டோம்!"

• அ. ராமச்சந்திரன், சென்னை.

? காந்தி நூல் தொகுப்பாளர் பேராசிரியர் கே. சுவாமிநாதன் பற்றி?

! நேருஜியின் அறுபதாவது பிறந்த நாளுக்கு அவருக்குப் பரிசளிக்கப்பட்ட - இந்திய எழுத்தாளர்கள் பலரது புதிய படைப்புக்கள் அடங்கிய - நூலுக்ெனப் பிரத்யேகமாகக் "கல்கி" எழுதியது "மோகினித் தீவு". உலக அமைதி என்ற நேருஜிக்குப் பிடித்த செய்தியை அடிப்படையாகக் கொண்ட குறுநாவல். அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அளித்தவர் கே. சுவாமிநாதன். ரமண மகரிஷியிடம் அளப்பரிய பற்றுக் கொண்ட அவரது சிகரமான தொண்டு 95 பகுதிகளாகக் காந்திஜியின் எழுத்துக்களைத் தொகுத்து அளித்தது தான். "அவரிடம் இலக்கியம் கற்ற பாக்கியசாலிகள்" என்று சொல்லிக் கொண்டு இன்றைக்கும் வலைய வரும் பெரிய மனிதர்கள் பலப்பலர்.

• ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

? வதந்தி, வதந்தி ஆவது எப்போது?

! தீயில் சூடு ஏறும் போது!

• இரா. சிவக்குமார், சென்னை.

? ருவாண்டா நாட்டில் நடக்கும் காட்டுமிராண்டித்தனமான போர் குறித்து?

! ஐயோ! கேட்காதீர்கள்! நினைத்தாலே வயிற்றைக் குமட்டுகிறது. ஆயிரமாயிரமாகக் கொன்று குவிக்க அப்படி ஓர் இனத்துவேஷமா? ஹிட்லரும் புராண அசுரர்களும் நல்லவர்களாகி விட்டனர் போங்க!

• கே.எல். குமணன், திருநெல்வேலி.

? "ஆட்சியைக் கலைக்கமாட்டோம்" என்று கூறி விட்டு அப்போதிருந்த தி.மு.கவைக் கலைத்தார் சந்திரசேகர். "தமிழக அரசைக் கலைக்கமாட்டோம்" என்கிறார் ராஜேஷ் பைலட். அப்படியென்றால்...?

! ஆதாயம் உண்டு என்றால் கலைப்பார்கள் என்று அர்த்தம்!



• ஓர் உறுத்தல்...



• இறக்கையை வெட்டினாலும்

• வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.

? காங்கிரஸ் எம்.எல்.ஏ. செல்வராஜ் அ.தி.மு.கவுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்ததும் அதனால் வாழப்பாடி அவரைக் கட்சியை விட்டு நீக்கியதும் பற்றி...?

! சட்டசபையில் 'ஜெ' காங்கிரஸாகச் செயல்பட்டு சஸ்பெண்ட் செய்யப்பட்ட இவரும், பிறகு தேர்தலில் அதிமுக ஆதரவுப் பிரசாரம் செய்ததும், தற்போது, "கட்சியிலிருந்து ஏன் நீக்கப்படக் கூடாது?" என்று கேட்கும் நோட்டீஸ் பெற்றதும் எல்லாம் அ, ஆ, இ, ஈ, போல, ஒன்றன்பின் ஒன்றாக நடக்கவேண்டிய முறையில் நடந்திருக்கிறது. ரொட்டித் துண்டத்தின் எந்தப் பக்கத்தில் வெண்ணெய் தடவப்பட்டிருக்கிறது என்று இவருக்கும் தெரியும்.



• தேவையற்ற கமெண்ட்!



• திருமணத்துக்குப் பிறகு...?

# உலக அழகியாக சுஷ்மிதா சென் தேர்வு குறித்து?

• அ. முஸ்தபா, தக்கோலம்.

? "இம்ரான்கான் போல் நானும் தில்லுமுல்லு செய்திருந்தால் 500 விக்கெட்டுகளுக்கும் அதிகமாக எடுத்திருப்பேன்" என்கிறாரே கபில்?

! கபிலுக்கு இது தேவையற்ற கமெண்ட். சாதனையின் உச்சியில் இருப்பவர்கள் சரியக் கூடாது. பெருந்தன்மை வேண்டும்.

• ஆர். கர்ணன், பெத்தரெங்கபுரம்.

? பூலான்தேவி திருமணத்துக்குப்பின் அரசியலில் குதிப்பாரா?

! இருக்கிற பூலான்தேவர்கள் போதாதா!

• ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஜி. மாஜினி
42, தேவடி தெரு,
ரெட்ஹில்ஸ், சென்னை - 52.

• த. இளஞ்சேரன், கொளப்பாடு.

? பிரம்மானந்த ரெட்டி மறைவு பற்றி?

! சுதந்திரப் போராட்டகாலக் காங்கிரஸ்காரர்கள் அரிதாகி வரும் காலகட்டம் இது. பிரம்மானந்த ரெட்டியின் மறைவு எண்ணிக்கையை மேலும் குறைக்கிறது. ஏற்ற இறக்கங்களைக் கண்ட போதிலும் கூட கடைசி வரை கட்சி விசுவாசி. ஆந்திரா முதல்வராகவும் மத்திய அமைச்சராகவும் திறமையான நிர்வாகி. என்றாலும் எமர்ஜென்ஸி காலத்திய மத்திய உள்துறை அமைச்சர் என்பது உறுத்தல்தான்.

• அன்பு கதிரேசன், இழ்கட்டளை.

? திருமணத்துக்குப் பொருத்தமான வயது முப்பத்தைந்து என்கிறாரே பேனசிர்?

! எழுபதுக்கு மேல்தான் என்கிறார் என்.டி.ஆர்!

• ஜி. மாஜினி, சென்னை. •

? தலைவருக்கு ஏதாவது நேர்ந்தால் கடைகளை நொறுக்கும் தொண்டர்கள் பிறகு கடைகளிடமே போய் கட்சிக்காக நன்கொடை வசூலிக்கின்றனரே?

! தொண்டர் படை என்பது குண்டர்படையாக இருக்கும் நமது ஜனநாயகத்தில் அவர்கள் எப்போது தொண்டர்கள் எப்போது குண்டர்கள் என்று கணிப்பதே கஷ்டம். வசூல் சமயத்திலும் குண்டர் போல் நடந்து கொள்ள அவர்களுக்குத் தெரியும்!

• முருகேசன், தேனி.

? "இறக்கையை வெட்டினாலும் நடமாடுவேன்" என்று சேஷன் கூறியிருப்பதற்கு என்ன

• மூன்று லட்சம் பரிசு!



• திருமண வயது எதி?



பொருள்!

! "இறக்கை இல்லா நெருப்புக்கோழி போல் ஓடுவேன்" என்கிறார்; சரி. ஆனால் நெருப்புக் கோழிதான் மணலுக்குள் தலையைப் புதைத்துக் கொள்ளும் என்பதால் உவமை, யதார்த்தங்களைப் பாராத சேஷனுக்கும் பொருத்தமாகத்தான் உள்ளது. இல்லாது போனால் உபி. முதல்வர் தவறு செய்தார் (?) என்ற கருத்தில் கடைசி நேரத்தில் இடைத் தேர்தல்களை ரத்து செய்து, அங்கு எல்லோரையும் பழி வாங்கியிருக்க மாட்டார்! உச்ச நீதிமன்றத்தில் தம் மூக்கு உடைபட இடம் தந்திருக்கமாட்டார்.

• கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? Bus சின்னத்துக்குக்கு Bravery, Unity, Success என்று வை.கோ. தரும் விளக்கம் பற்றி..?

! கள்ளத்தோணி ஏறி ஈழம் சென்றது வீரமாகாது. கட்சியை உடைத்தது ஒற்றுமையாகாது. கொடி, தேர்தல் சின்னம் இவற்றை இழந்தது வெற்றியாகாது!

• வி. பூங்கோதை குப்புஸ்வாமி, சென்னை.

? சுஷ்மிதா சென், உலக அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து?

! அழகு என்பது உடலழகு மட்டுமல்ல, உள்ளத்தின் அழகையும் உள்ளடக்கியது என்ற கருத்தில், கடைசி கட்டம் வரை வந்துவிட்ட அழகிகளை ஒரே மாதிரியான கேள்வி கேட்க, "தாய்மைதான் பெண்மையின் சிறப்பு" என்று கூறி, மற்ற அனைவரையும் விட அதிக மார்க்குகள் தட்டிச் சென்று, உலக அழகியாகத் தேர்வு பெற்றவருக்கு நமது வாழ்த்துக்கள்.

• பஸ் விளக்கம்!



• உலக அழகி



• ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

? வைரமுத்துவுக்கு மலேசிய தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் மூன்று லட்சம் பரிசு அளித்துள்ளார்களே?

! 'பரிசு அளித்துள்ளார்கள்' என்பதை விட 'கிடைக்கச் செய்துள்ளார்கள்' என்பதே சரி. வைரமுத்துவின் சமீபத்திய நூல் ஒன்றின் வெளியீட்டு விழாவில் ஆர்வலர் சிலர் கூடுதல் விலை தந்து பெற்றதில் கிடைத்த தொகை இது. வைரமுத்துவின் "கவி ராஜன் கதை" அல்லது "சிகரங்களை நோக்கி" படைப்பு இங்கே உரிய முறையில் கௌரவப்படுத்தப்பட வேண்டும் என்பதை சம்பந்தப்பட்டவர்களுக்கு உணர்த்தும் ஒரு நிகழ்ச்சி. ஆனால் இந்த நிகழ்ச்சியே தாமதத்தை உருவாக்கினாலும் நம் நாட்டினர் இயல்புக்கு அது அதிசயமில்லைதான்!

• ரகுராம், சென்னை.

? மெக்கா நெரிசலில் ஏழு இந்தியர் உள்பட 1000 பேர் பலியாகியுள்ளனரே?

! 1990 ல் இது போன்ற ஒரு நெரிசலில் 1426 பேர் மரணமடைந்தனர் என்னும் போது பாடங்கள் சரிவரக் கற்கப்படவில்லை என்றுதான் அர்த்தம். சவூதி அரசு தீவிரமாக யோசித்து, இத்தகைய விபத்துக்கு மறுபடி இடமில்லாதபடிக்கு சர்வதேச நிபுணர்களின் கருத்தைக் கேட்டறிந்து, திட்டம் வகுத்து அமுல்படுத்த வேண்டும்.

# திமிங்கலங்கள் தூண்டில்களில்

பிரபாகரன் நேர்மையான ஓர் அரசு அதிகாரி. அதனாலேயே மத்திய அரசு அவரை சேலம் வனத்துறை அதிகாரியாகப் பதவியில் அமர்த்தியது. பிரபாகரன் கொஞ்சம் பயத்துடனேயேதான் தம் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். காரணம் அவரது வனத்துறையில் அடங்குகிற ஆத்தூர் கல்வராயன் மலை, தம்மம்பட்டி பச்சைமலை, வாழப்பாடி சந்து மலை, ராசிபுரம் போதமலை, அரூர் வாச் சாத்திமலை போன்றவற்றில் தரமான உயர்ந்த ரக சந்தன மரங்கள் அதிகம். சந்தனக் கடத்தலுங்கூட.

பதவியில் அமர்ந்த முதல் வாரத்திலேயே மலைப் பகுதிகளையெல்லாம் ஒரு சுற்று சுற்றி ஆராய முற்பட்டார் பிரபாகரன். எந்தெந்த இடங்களிலெல்லாம் சந்தன மரங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன என்பனவற்றையெல்லாம் குறிப்பெடுத்தார். பெருமளவில் சந்தன மரங்கள் வெட்டப்பட்டிருப்பதைப் பார்த்து 'தேசிய சொத்து இப்படிக் களவு போகிறதே!' என்று மனம் பதைத்தார். வெட்டிய மரத்துண்டுகளைச் சுமந்து செல்லும் மலைவாழ் பெண்களும் சிறுவர்களும் கூட அவரது பார்வையில் பட்டனர். அவரைப் பார்த்ததும் பயந்து ஓடிய அவர்களைப் பிடிக்க முற்பட்ட தம் காவலர்களை 'வேண்டாம்' எனத் தடுத்தார். சில நம்பகமான அதிகாரிகளைப் பின்தொடர வைத்து, அவர்கள் செல்கிற இடங்களைப் பார்த்துவரச் செய்தார். சிறிய மீனைப் போட்டுப் பெரிய மீனைப் பிடிக்க நினைத்தார் பிரபாகரன். தாம் திமிங்கலங்களுக்குத் தூண்டில் போடுகிறோம் என்று அவர் அப்போது நினைக்கவில்லை.

அன்று மாலை, பிரபாகரன் கீழ் பணி புரியும் துணை அதிகாரி கோலப்பன், பெரும் புள்ளி ராஜநாயகம் வீட்டில் அவரைச் சந்தித்தார்.

"கொஞ்ச நாள் வேண்டாம் சார். நிறுத்திடுவோம்" என்று கோலப்பன் கேட்டுக் கொள்ளவும் அவரை முறைத்தார் ராஜநாயகம்.

"ஏன்?"

"புதுசா பிரபாகரன்னு ஒருத்தர் வந்திருக்கார். கொஞ்சம் கெடுபிடி. அதனாலதான்..."

"என்னய்யா பூச்சாண்டி காட்டறே? கொஞ்சம் கூடமாட கொடுத்து சரிக்கட்ட வேண்டியதுதானே!"

"இவர் விஷயத்துல முடியாதுங்க."

"யோவ், நம்ம அமைச்சருக்குப் பிறந்த நாள் வருதுய்யா. ஐம்பது லட்ச ரூபா பண முடிப்புத் தர்றதாச் சொல்லிட்டேன்யா. மாவட்டம் பூரா நூறு நாத்தம்பது கட்-அவுட்டாவது வைக்க வேணாமா? ஊர்வலம், விழான்னு எக்கச்சக்க செலவு இருக்குய்யா."

"இப்ப வேணாம் ஸார். பிரபாகரன் பல விஷயங்களைத் தெரிஞ்சு வச்சிருக்கார். அறுபட்டு மொட்டையா நிக்கற மரங்களையெல்லாம் கணக்கெடுத்துக்கிட்டிருக்கார். எப்ப எங்கே போவார்னு சொல்ல முடியலே."

"எந்த ஏரியாவெல்லாம் பார்த்தாரு?"

"முக்கால்வாசி இடங்களைப் பார்த்துட்டார் ஸார். நல்லவேளை, அரநூத்துமலை, நெய்யமலை பக்கந்தாங்க வரலே. அங்கதான் ஸார் நம்ம லாரிங்க பத்து லோடாயிக்கிட்டிருக்கு."

"யோவ்! அதெல்லாம் பட்டா போட்டுத் தந்த நிலந்தானே?"

"ஆமா ஸார். நாம முன்னேற்பாடா மந்திரிகிட்டே சொல்லி நம்ம ஆளுங்களுக்குப் பட்டா போட்டுத் தந்திருக்கிற இடந்தாங்க."

"அப்புறமென்ன?"

"நானுங்கூட ஜாடை மாடையாச் சொன்னேங்க. அப்பவும், பட்டா போட்ட நிலமா இருந்தாலும் சந்தன மரமெல்லாம் அரசுக்குத் தானே சொந்தம்னு சட்டம் பேசறாருங்க."

"ஓஹோ, அவ்ளோ விவரம் பேசறானா? அவன் ஆக்ஷன் எடுக்கறதுக்கு முன்னாடி ஏதாவது செய்."

"செய்துட்டேங்க. நம்ம ஆளுங்ககிட்டே சொல்லி ராவோட ராவா

# சிக்கலேயில்லை

புதுவை சந்திரஹரி

மொட்டையா நிக்கற மரத்தையெல்லாம் வேரோட பிடுங்கிடச் சொல்லிட்டேங்க. அப்பத்தானே கேஸ் கிஸ் எதுவும் போட முடியாது?"

"சபாஷ். நீ என்ன பண்ணறே, சட்டுப் புட்டுன்னு நம்ம லாரிங்களை தேசிய நெடுஞ் சாலைக்கு வந்திடச் சொல்லுய்யா. அங்கே வந்திட்டா அப்புறம் ஆபத்தில்லே."

"அதுலே ஒரு சிக்கல் இருக்குது ஸார். பாப்பிரெட்டிப்பட்டி, தும்பல் வழியாத்தாங்க ஹைவேலுக்கு அவர் ஆளைப் போட் டிருக்காரு."

"அப்பிடியா?"

"அதுமட்டுமில்லே ஸார், லாரிங்க இன்னும் ஃபுல்லா லோடாகலே. சந்தனக் கட்டைகளைச் சுமந்து வர்ற கூலிக்காரங்க எல்லாம் கெடுபிடி ஜாஸ்தியா இருக்குன்னுட்டு இப்ப கிலோவுக்குப் பத்து ரூபா கேக் கிறாங்க."

"அஞ்சு ரூபாதானே வழக்கமாத் தர்றது?"

"எல்லாரும் விஷயம் தெரிஞ்சு பேசறாங்க ஸார். கிலோ நூத்தம்பது இருநூறுன்னு விக்கிறீங்க, எங்களுக்குப் பத்து ரூபா தரக்கூடாதான்னு கேட்கிறாங்க."

"மார்க்கெட்டோட கரண்ட் ரேட் டெல்லாம் இவனுங்களுக்குத் தெரியு துய்யா. சரி, நம்ம ஆளுங்ககிட்டே சொல்லி, ஒரு எட்டு ரூபா ஆக்கிச் சமாளிக்கச் சொல்லு."

"அப்ப கொஞ்ச நாள் நிறுத்திடு வோமா ஸார்?"

"அதான் சொன்னேனே... முடியா துய்யா. இந்த மாசம் ஐம்பது டன் சப்ளை பண்ணறதா சந்தன ஆலைக் காரங்ககிட்டே அட்வான்ஸ் வாங் கிட்டேன்யா. சீப்பா கெடைக்கு துன்னு அவனுங்க நம்ம கவர்ன் மெண்ட் விட்ட சந்தனக்கட்டை ஏலத் திலே கூட கலந்துக்கிடலைய்யா."

"லாரிங்களை இப்ப எடுக்கறது ஆபத்தாச்சேங்க.

அதுவுமில்லாம மழை வேற தூறிக்கிட்டிருக்கு கமகமன்னு சந்தன வாசனை கிளம்புங்க."

"சந்தனக் கட்டைங்க மேலே பி.எச்.சியை தாராளமாத் தூவச் சொல்லு.வாசனை அமுங் கிடும். அப்புறம் என்ன செய்யறே? லாரிங் களை எல்லாம் தும்பல் வழியா நெடுஞ் சாலைக்குப் போகச் சொல்லு. ஒரே ஒரு லாரி மட்டும் வாழப்பாடி வழியாப் போவட் டும். அதிகாரிங்க கவனத்தைத் திருப்ப, நீயே



**அடுத்த இதழில்...**

**●● வீடியோ கேம்ஸ் : திறமையா? சூதாட்டமா?**

**- கவர் ஸ்டோரி**

துப்புத் தர்ற மாதிரி தந்து, அந்த லாரியை மாட்ட வச்சு, நல்ல பேர் எடுத்துக்க. பிடிபட்டவுடனேயே டிரைவரையும் கிளீனரையும் ஓடிடச் சொல்லு. அப்பத்தான் கண்டுபிடிக்க முடியாத கடத்தல் குத்தத்துக்குக் கீழே வரும். ஃபைலையும் சட்டுன்னு மூடிடலாம்."

"எனக்கென்னவோ பயமா இருக்கு ஸார்."

"போய்யா, வீணா பயந்து சாகறே. மாதம் பத்தாயிரம் கனையா வாங்கறப்போ பயப் படலியா? போ... போ... உனக்கே ப்ரமோஷன் வர்ற மாதிரி மந்திரிகிட்டே சொல்லி ஏற்பாடு செய்யறேன்."

"சரி ஸார்."

"மத்த லாரிங்களையெல்லாம் தைரியமா ஓட்டச் சொல்லு. கேரளா பார்டர் வரை செக் போஸ்ட்டுக்கெல்லாம் ஆயிரக்கணக்கா பணம் அழுதிருக்கேன்."

கிடைத்த துப்பினை வைத்துக் கொண்டு செயலில் இறங்கினார் வனத்துறை அதிகாரி பிரபாகரன்.

வாழப்பாடி சரகத்தில் தாமே தம் ஆட்களுடன் துப்பாக்கி சகிதம் சென்று, மறைந்திருந்து, சந்தனக் கட்டைகளைக் கடத்திக் கொண்டு வந்த அந்த லாரியை மடக்கிப் பிடித்தார். அவரது முன்னெச்ச ரிக்கை நடவடிக்கையால் டிரைவரும் கிளீனரும் தப்பிக்க முடியாமல் பிடிபட்டனர். லாரியில் கால்வாசி அளவு கூட லோடு இல்லாதது அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. 'தெரிந்தே மாட்டி வைக்கப் படுகிற லாரியாக இருக்குமோ?' என்று சந்தேகித்தார்.

தன் ஆள் மாட்டிக் கொண்டான் என்பதையறிந்து பதறினார் ராஜநாயகம். "சுத்த புண்ணாக்குப் பயலுங்க" என்று சினந்தார். இனி மேல்மட்ட உதவியை நாட வேண்டும் என்று முடிவெடுத்தார். அதன் படியே மேல் மட்டத்தில் உள்ளவர்களைக் கலந்து ஆலோசித்து, திட்டத்தை உருவாக்கினார்.

தம்முடைய உதவியாளரை அழைத்தார்.

"யோவ், வாழப்பாடியிலே பிடிபட்ட நம்ம லாரி சந்தனக்கட்டைங்களோட எந்தக் கிடங்குக்குப் போறதுய்யா? சேலத்துக்கா?... சத்தியமங்கலத்துக்கா?" - கேட்டார்.

தெரிந்து கொண்டு வந்த உதவியாளர், "ஐயா, வன அதிகாரி பிரபாகரன், பத்திரமா இருக்கணும்னு தன்னோட குவார்ட்டர் ஸுக்குப் பக்கத்திலேயே இருக்கிற கிடங் குக்குத்தான் லாரியைக் கொண்டு போய் வச்சிருக்காராம்" என்றான்.

"பைத்தியக்காரப்பய... செமத்தியா மாட்டிக்கிட்டான்!" - சிரித்தார் ராஜநாயகம்.

இதற்கிடையில் முதல் தகவல் அறிக்கையைத் தாக்கல் செய்திருந்தார் பிரபாகரன்.

வழக்கு நீதிமன்றம் வந்தது.

பிடிபட்ட கடத்தல் லாரியில் முழுலோடு சந்தனக் கட்டைகளை ஏற்றியிருந்ததாக டிரைவர் சாட்சியளித்தான்.

பிரபாகரன் வாழப்பாடியிலிருந்து பிடிபட்ட லாரியைக் கிடங்கிற்குக் கொண்டு

## நினைவுபடுத்துகிறோம்!

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கான கதைகள் வந்து சேரக் கடைசி நாள் ஜூன் 15! விரிவான விவரங்களுக்குச் சென்ற இதழைப் பாருங்கள். அல்லது அடுத்த இதழ்வரை காத்திருங்கள்!**

**- ஆசிரியர்**

**We accept Fixed Deposits at the rate of 24% with incentives.**

**வாடகை வீட்டில் குடியிருப்போருக்கு ஓர் அரிய நற்செய்தி!**
**நீங்களும் சொந்த வீடு வாங்கலாம்.**
**காசி பில்டர்ஸ் நிறுவனம் வழங்கும் பரிசு மழை!**

காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் 5-வது ஆண்டில் வெற்றிகரமான 13-வது குலுக்கல் 26.06.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.

இத்திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்துச் சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகைப் போல செலுத்தலாம். இத்திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**சுபமங்களா திட்டம் :**

இத்திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத்திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :**

சென்னை கே. கே. நகர், மேற்கு விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

விரைவில் விலை ஏற்றம் அறிவிக்கப்பட இருப்பதால் உடன் பதிவு செய்து பயன் அடையுங்கள்.

**FIXED DEPOSITS :**

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

# காசி ஹவுசிங் - டெவலப்மெண்ட் லிமிடெட்

மற்றும்

# காசி பில்டர்ஸ்

**காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,**
91, 92, ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.

FAX : 044 - 4821897

## திருவாரூர் வாசகர் வட்டம்!

இனிய திருவாரூர் வாசகர்களே! கல்கி வாசகர் வட்டக் கூட்டம், உங்கள் ஊரில் 5.6.94 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு, வடபாதிமங்கலம் சோமசுந்தர முதலியார் ஆண்கள் மேநிலைப்பள்ளி - சென்ட்ரல் ஹாலில் நடைபெறவுள்ளது. தவறாமல் வரவும். நண்பர்களையும் (அக்கம்பக்கத்து ஊர்க்காரர்களையும்) அழைத்து வாருங்கள்!

- ஆசிரியர்

செல்லும் வழியில், சங்ககிரி, பவானிக்கு இடைப்பட்ட இடத்தில், அரை லோடுக்கும் அதாவது இரண்டு டன்னுக்கும் அதிகமான சந்தனக் கட்டைகள் இறக்கப்பட்டு, விற்கப்பட்டுக் கைமாறியிருக்க சாத்தியக் கூறுகள் உள்ளதாகப் பொய்சாட்சிகள் நிரூபித்தன.

கைப்பற்றப்பட்ட லாரியில் சந்தனக் கட்டைகள் குறைவாக இருந்தன என்கிற பிரபாகரனின் வாதம் எடுபடாமல் போனது. பிரபாகரனுக்கு ஆதரவாகவே அவரது சக அதிகாரிகள் பேசுவதாகக் கருதப்பட்டது.

இருந்தாலும் கடத்தல் விற்பனையில் பிரபாகரன் நேரடியாகச் சம்பந்தப்பட்டதற்குச் சாட்சிகள் இல்லாமல் போனதாலும் முந்தைய நன்னடத்தை காரணமாகவும் அதிகமாக தண்டிக்கப்படாமல் பதவி உயர்வும், இரண்டு ஊதிய உயர்வு நிலைகளும் இல்லை என்கிற குறைந்தபட்ச தண்டனையோடு எச்சரிக்கை மட்டும் செய்யப்பட்டு, வேறு இடத்திற்கு மாற்றப்பட்டார்.

சில லட்சங்களை அபராதத் தொகையாகக் கட்டிவிட்டுப் பல கோடிகளைச் சம்பாதித்த திருவாளர் ராஜநாயகம் அமைச்சரின் பிறந்த நாள் விழாவில் கட்சி வளர்ச்சி நிதிக்காக ரூபாய் ஐம்பது லட்சம் பண முடிப்பை நன்கொடையாக வழங்கினார். கேமராக்கள் பளிச்சிட்டன. அடுத்த நாள் தினசரிகளைப் புகைப்படங்கள் அலங்கரித்தன!

---

## தொழிலுக்கேற்ற வர்ணனை!



உங்கள் அர்ச்சனையை ஆரம்பிச்சுட்டேளா!

- அர்ச்சகர் மனைவி

லெக்சர் பண்ணியது போதும் நிறுத்துங்கோ!

- புரொபசர் மனைவி

எதற்கெடுத்தாலும் குறுக்கு விசாரணை செய்யறீங்க!

- வக்கீல் மனைவி

மறுபடியும் பழைய பல்லவியைப் பாடாதீங்க!

- பாகவதர் மனைவி

உங்க அம்மா உங்களுக்கு நல்லா கீ கொடுத்தது தெரியுதே!

- கடிகார ரிப்பேர்காரர் மனைவி

- எஸ். ராஜாராம்

ஹாஜி முஷ்டாக் ஒரே சமயத்தில் இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் வசிக்கிறார்! புருட்டி என்ற கிராமத்தில் இவரது வீட்டில் ஒரு பாதி இந்தியாவிலும், மறு பாதி பாகிஸ்தானிலும் உள்ளது! மூன்று அறைகள் இந்திய எல்லைக்குள் உள்ளன! ஓர் அறை பாகிஸ்தானில் உள்ளது! மின்சாரம் பாகிஸ்தானிலிருந்து சப்ளை ஆகிறது! அடிக்கடி இந்திய ராணுவம் இவர் வீட்டில் பாக். ஊடுருவாளி யாராவது இருக்கிறானா என்று சோதனையிடுமாம்! மறுபுறமாக இந்திய ஊடுருவாளிக்காக பாகிஸ்தான் ராணுவம் திடீர் சோதனையிடுமாம்!

ஆதாரம் : ஸண்டே
தகவல் : சம்பத்குமாரி



## 81. வானரர்களின் சந்தேகம்

பாபம் செய்துவிட்டு அதன் பயனாக வந்த அபாயத்தினின்று எப்படித் தப்புவது என்று ராவணன் கஷ்டப்பட்டான். அரசர்களின் வழக்கம்போல் மந்திராலோசனை சபை கூட்டினான். சபையில் சர்க்கரைப் பேச்சு பேசுபவர்கள் பலர் பேசினார்கள். ஆனால் இருவர் ராவணனுக்குக் கோபம் வரும்படி கடினமாகப் பேசினார்கள்.

'தவறு செய்தாய். ஆயினும் நான் உனக்காக உயிரைக் கொடுப்பேன்!' என்றான் ஒருவன்.

'பாபத்தைச் செய்தாய். ஆயினும் இப்போதும் தப்புவதற்கு வழி உண்டு. அந்த வழியைப் பிடித்துச் செல்வாயானால் நாம் எல்லாரும் அழியாமல் சுகமாக இருக்கலாம். சீதையைத் திரும்பித் தந்து விட்டு ராமனிடம் சரணமடைவாய்' என்றான் விபீஷணன்.

'மாட்டேன்' என்றான் ராவணன். 'அப்படியானால் உன்னை விட்டேன்' என்றான் விபீஷணன்.

# சக்கரவர்த்தித் திருமகன்

தரும சங்கடம் ஒன்று வந்து எதிரில் நிற்கும்போது தத்தம் சுபாவத்தை அனுசரித்து அவரவர்கள் நடந்து கொள்வார்கள். எல்லாரும் ஒன்று போல் நடந்து கொள்ள மாட்டார்கள்.

கர்வபங்கத்துக்கு ராவணன் மனம் ஒப்பவில்லை. பாப காரியம் செய்வது கஷ்டமானால், பிழையை ஒப்புக் கொண்டு 'நான் தோற்றேன்' என்று ஒப்புக் கொள்ளுவது அதைவிட கஷ்டமான காரியம். பாபம் செய்வதற்குத் தைரியம் வேண்டும்; பாபம் செய்தேன் என்று ஒப்புக் கொள்வதற்கு இரு மடங்கு தைரியம் வேண்டும். அந்த தைரியம் ராவணனுக்கு இருக்கவில்லை. அவனுடைய சுபாவத்தில் அதற்கு இடமே இல்லை.

அதருமம் ஒன்று நடக்கும்போது பாபம் செய்தவனைச் சேர்ந்து நிற்பவர்களுக்கு ஒரு பெரிய பிரச்னை ஏற்படுகிறது. 'இந்த வீட்டில் நான் சோறு உண்டவன், இவனை நான் எப்படிக் கை விடலாம்?' 'கூடப் பிறந்தவன் அறியாமையால் பிழை செய்தான். அவனை நான் விட்டு விடுவது பயங்காளித்தனமாகும்.' இவ்வாறான சிக்கல்கள் கிளம்பும். செய்யப்பட்ட அதருமத்தில் தாமும் பங்கு எடுத்துக் கொண்டு விடுவதே வீரர்களுடைய கடமை என்று முடிப்பார்கள் சிலர். ஆனால் வேறு விதமாக நினைப்பவர்களும் உண்டு. பிழை செய்தவனைத் திருத்துவதற்கு வேண்டியதெல்லாம் செய்து பார்ப்பார்கள். அதனால் உண்டாகும் கோபம், வெறுப்பு, நஷ்டம் இவற்றைப் பொருட் படுத்தாமல் செய்யக் கூடியதையெல்லாம் செய்து பார்ப்பார்கள். அந்த முயற்சியெல்லாம் வீணான பின், பாபம் செய்பவனைத் துறப்பார்கள். தருமத்தைத் துறக்க மாட்டார்கள். அதருமத்தில் சேருவது ஒருநாளும் கடமையாகாது என்பது அவர்களுடைய கருத்து. செய்ய வேண்டிய முயற்சியைச் செய்யாமலிருப்பது



அதருமமாகும். அதையெல்லாம் செய்து விட்ட பின், தம் கடமை முன்போலவே நிற்கும். தருமத்தைப் புறக்கணித்துவிட்டு அண்ணனுக்காகத் தம்பியோ தம்பிக்காக அண்ணனோ அதருமத்தில் பங்கு எடுப்பது சரியாகாது என்பது அவர்களுடைய முடிவாகும்.

ராமாயணத்தில் கும்பகர்ணனும் விபீஷணனும் இந்த இரண்டு பட்சத்திற்கும் சிறந்த விளக்கங்களாக அமைந்து நிற்கிறார்கள்.

"சீதையை அபகரிக்கலாம், வா. தண்டகாரண்யம் போவோம்" என்று ராவணன் எவ்வளவு வேண்டிக் கொண்டிருந்தாலும் விபீஷணன் போயிருப்பானா? போயிருக்க முடியுமா? போயிருந்தால் யாராவது விபீஷணனைப் புகழ்ந்திருப்பார்களா?

"இப்போதாவது சீதையைத் திருப்பிக் கொடு. க்ஷேமமாக இருப்பாய். ராமன் மன்னிப்பான். அதுவே தர்மம்" என்று சொல்லிப் பார்த்தான். கேட்கவில்லை. உண்மையில் பாபத்தை வெறுக்கும் ஒரு ஆத்மாவுக்குப் பிடிவாத மூர்க்கத்தில் நின்ற ராவணனை விட்டு விலகுவதை விட வேறு வழியிருக்கவில்லை.

ஆகையால் விபீஷணனைக் குற்றம் சொல்லுவது தவறு. நமக்குள் தரும உணர்ச்சி ஓரளவு குறையாக இருப்பதாலேதான் குற்றம் சொல்லுவோம்.

ஆயினும் கும்பகர்ணனைக் குற்றம் சொல்லலாமா? அதுவும் முடியாது. ரத்த பாசத்தால் இழுக்கப்பட்டுத்



தன் உயிரைத் தியாகம் செய்தான். அவ்வாறே மாரீசனும் செய்தான். கும்ப கர்ணனைப் பழிக்க முடியாது என்பதால் விபீஷணன் செய்தது குற்றமாகாது. தருமத்துக்கு விரோதமாகவே பேசுவதில் சிலருக்கு இந்தக் காலத்தில் அதிக ருசியானபடியால் இந்த விஷயத்தை இங்கே இவ்வளவு நீட்டி எழுத வேண்டியதாயிற்று.

பாபம் செய்தால் நண்பர்களுடைய நட்பையும் சுற்றத்தாருடைய துணையையும் கட்டாயமாக இழப்போம் என்கிற பயம் மக்களுக்கு இருக்க வேண்டும். எப்படியா யினும் இவர்கள் நமக்குத் துணையாகவே இருப்பார்கள். கைவிட மாட்டார்கள் என் கிற தைரியத்தைக் கொடுத்து விட்டோ மானால் உலகத்தில் பாபத்தைத் தடுப்பது மிக கஷ்டமாகும். சாதாரணமாகவே மக் களைப் பாபத்தில் இழுக்கும் வேகங்களுக்கு பலம் அதிகம். அதற்கு இந்தத் துணையும் சேர்ந்து விட்டால் வெகு மோசமாகும். இதை நினைவில் வைத்துக் கொள்ளாமல் சிலர் வாதாடுகிறார்கள். "குலத் துரோகி!" என்று ராவணன் மட்டும் சொல்ல வில்லை. ராவணனுக்குப் பின் நம்மில் பலரும் விபீ ஷணனைக் குறித்து அவ்வாறே குறை சொல்லுகிறார்கள். முக்கியமாகத் தங்களு டைய தவறான முயற்சிகளுக்கு, தங்களுக் குச் சம்பந்தப்பட்டவர்களுடைய துணையை எப்படியாவது அடைய வேண் டும், அதற்கு இடைஞ்சல் ஏற்படக் கூடாது என்று விரும்புகிறவர்கள் எல்லாரும் விபீ ஷணனைப் பாவி என்றும் துரோகி என்றும் சொல்லுவது வழக்கம். 'குலத் துரோகி' என்கிற பழிச் சொல்லுக்குப் பயப்படாமல் விபீஷணன் அதருமத்தினின்று வில கினான். விலகிய பிறகும் விபீஷணன் பாடு கஷ்டமாகத்தான் இருந்தது. நடந்த தைக் கேளுங்கள்.

கடலின் வடக்குக் கரையில் நின்ற வானரத் தலைவர்கள் திடீர் என்று ஆகா யத்தில் ஒரு பிரகாசத்தைக் கண்டார்கள். பொன் முடி கொண்ட மேருமலை போல் மேலே ஆகாய வீதியில் ஒரு ஜோதி ஜொலிப்பதைக் கண்டார்கள். மேகங்களி னிடையில் மின்னும் மின்னல், மின்னின பிறகு மறைந்து போகாமல் அப்படியே ஆகாயத்தில் நின்ற மாதிரி ஜொலித்தது. பார்த்ததில் பெரு வடிவங்கள் கொண்ட ஐந்து ராக்ஷசர்கள் நிற்பதைக் கண்டார்கள். வானரப் படைத் தலைவனும் அரசனு மான சுக்ரீவன் இதைப் பார்த்துவிட்டு, "சந்தேகமேயில்லை. இந்த ராக்ஷசர்கள் எங்களைக் கொல்ல லங்கையிலிருந்து வந் திருக்கிறார்கள்" என்றான்.

அரசன் இவ்வாறு சொன்னதுமே வானர வீரர்கள் மரங்களும் பாறைகளும் எடுத்துக் கொண்டு யுத்தத்துக்கு ஆயத்த மாகி, "உத்தரவு கொடுங்கள்; இவர்களை இப்போதே மடக்கி வதம் செய்து பூமியில் தள்ளுவோம்" என்று கர்ஜித்தார்கள்.

இப்படி வானரர்கள் தங்களுக்குள் பேசியும் கர்ஜித்துக் கொண்டும் வந்ததைக் கேட்ட விபீஷணன், பயக்குறி ஒன்றும் காட்டாமல் வஞ்சனையற்ற உள்ளத்தோடு மேலே அனைவருக்கும் தெரியும் படியாக நிலைகுலையாமல் நின்று கம்பீரக் குரலில் பேசலானான்:

"ராக்ஷசராஜன் ராவணன் என்கிற துஷ் டனுடைய தம்பியாகிய விபீஷணன் நான் நிற்கிறேன். தடுக்க வந்த ஜடாயுவையும் கொன்று சீதையை பலாத்காரமாகக் கொண்டு வந்து ராக்ஷசிகளின் காவலில் வைத்திருக்கும் ராவணனுடைய தம்பி நான். 'இந்த காரியம் தகாது, இவளை ராமனிடம் மறுபடியும் மரியாதையாக ஒப்பு வித்து விட்டு மன்னிப்புக் கேட்பாயாக' என்று நான் பலவாறு வற்புறுத்தியும் அவனுடைய அழியும் காலம் நெருங்கிவிட்டபடியால் நான் சொன்னதை அவன் ஒப்புக் கொள்ள வில்லை. அதற்குப் பதிலாக சபை நடுவில் என்னை ஒரு வேலைக்கார அடிமையைக் காட்டிலும் மட்டமாகக் கருதித் திட்டி அவமானப் படுத்தினான். ஆனபடியால் இதோ வந்து நிற்கிறேன். நாடு, நகரம், மனைவி, மக்கள் அனைத்தையும் துறந்து விட்டு ராகவனைச் சரண் அடைய வந்து நிற்கிறேன். அதைச் சீக்கிரம் திருமகள் கேள் வனுக்குத் தெரியப்படுத்தி என்னை அனுக் கிரகிப்பீர்களாக" என்றான்.

உடனே சுக்ரீவன் ராமனிடம் சென்று சொன்னான்:

"ராவணனுடைய தம்பி விபீஷணன் மற்றும் நான்கு ராக்ஷசர்களுடன் வந்து தங்களைச் சரணமடைய விரும்புகிறான். ஆகாயத்தில் நிற்கிறார்கள். இதைப் பற்றி நீதி சாஸ்திரமறிந்த தாங்கள் நன்றாக ஆராய வேண்டும். இந்த அரக்கர்கள் பல வேஷங் கள் போடுவார்கள். கண்ணுக்குத் தெரியா மல் மறைந்தும் வேலை செய்வார்கள். துஷ்டர்களுக்குரிய எல்லா சாமர்த்தியமும்

தைரியமும் பெற்றவர்கள். இவர்களை நம்பவே கூடாது. இவர்களை ராக்ஷச ராஜனான ராவணன் அனுப்பியிருக்கிறான் என்றே நான் எண்ணுகிறேன். நமக்குள் புகுந்து நம் ஒற்றுமையைக் கலைத்து விடுவதற்காக வந்திருக்கிறார்கள். அல்லது சமயம் பார்த்து நமக்குள் முக்கியஸ்தர்களைக் கொன்று விட்டுத் திரும்புவார்கள். இந்த விபீஷணன் என்ன பேசினாலும் இவன் நம்முடைய பரம சத்துருவின் சொந்தத் தம்பி என்பதை நாம் மறக்கக் கூடாது. பிறப்பில் துஷ்டப் பிறப்பான ராக்ஷச ஜன்மம். இவனை நாம் எப்படி நம்பலாம்? இது ராவணனுடைய சூழ்ச்சியே. சந்தேகமில்லை. இவனையும் இவன் துணைவர்களையும் வதம் செய்வதே நலம். இவனை நமக்குள் சேர்த்துக் கொண்டோமானால் சமயம் பார்த்து நம்மை வஞ்சிப்பான். நம்மை அழித்து விட்டுத் திரும்புவான். துஷ்டனும் தயையில்லாதவனுமான ராவணனுடைய தம்பியாகிய இந்த அரக்கனையும் இவன் கூட வந்திருக்கும் துணையாட்களையும் உடனே வதம் செய்ய உத்தரவு தாருங்கள்."

அரக்கனைக் கண்டு ரோஷம் மேலிட்டு சுக்ரீவன் இப்படித் தன் அபிப்பிராயத்தை மறைக்காமல் தெரியப் படுத்தி விட்டு ராமனுடைய உத்தரவை எதிர்பார்த்து நின்றான்.

வானர ராஜன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ராமச்சந்திரன், பக்கத்தில் நின்ற ஹனுமான் முதலிய வானர சிரேஷ்டர்களைப் பார்த்து, "நீதி சாஸ்திரம் அறிந்த அரசன் சொன்னதையெல்லாம் கேட்டீர்கள். ராவணனுடைய தம்பி வந்து நிற்கிறான். அவனைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தையும் கேட்க விரும்புகிறேன். நெருக்கடியான சமயங்களில் நண்பர்கள் சுற்றத்தார் இவர்களுடைய யோசனை மிகவும் முக்கியம். உள்ளத்தில் தோன்றுவது போல் கூச்சமின்றிச் சொல்லுங்கள்" என்றான்.

அவ்வாறே ஒவ்வொருவரும் தத்தம் அபிப்பிராயத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

(தொடரும்)

## ஜோக்கைப் பூர்த்தி செய்யுங்கள்! -போட்டி முடிவு-



"நேத்துவரைக்கும் நல்ல மனுஷனா இருந்தவர், கல்யாணம் ஆனதும் லஞ்சம் வாங்க ஆரம்பிச்சுட்டாருப்பா!"

"ஆமா, பெண்டாட்டியைச் சந்தோஷமா வெச்சுக்கணுமில்ல?"

"அதுக்கில்லைப்பா. பிறக்கப்போற தன் பிள்ளைகளை ஸ்கூல்ல சேர்க்க ஆகிற அட்மிஷன் செலவுக்குப் பதிலா, தானே ஒரு நர்சரி ஸ்கூல் ஆரம்பிச்சுடலாம்னுதான்!"

பூர்த்தி செய்யப்பட்ட மேற்படி ஜோக் தான் சிறந்தது எனக் கருதப்பட்டது. ஆனால் இதே கருத்தை மையமாகக் கொண்டு சில வார்த்தைகள் மட்டுமே வித்தியாசப்பட, ஆறு பேர் எழுதியிருக்கிறார்கள்.

எனவே பரிசுத் தொகையான ரூ. 250/- இந்த ஆறு பேருக்கும் சமமாகப் பிரித்து வழங்கப்படுகிறது. தலா ரூ. 42/- பரிசு பெறுவோர்:

1. திருமதி விஜிலா தேசிராஜன், வெள்ளை விநாயகர் தெரு, திருச்சுழி, காமராஜர் மா.வ. - 626 129; 2. ப. சரவணன், 21, மாரியம்மன் கோயில் தெரு, கொரநாடு, மயிலாடுதுறை - 609 002; 3. என். அன்புச்செழியன், லீகால்ஸ் லிட், 31, சிப்காட் தொழிற்பேட்டை, ராணிப்பேட்டை - 632 403; 4. கா. கார்த்திகேயன், 1A/5 M.F. சாலை, இராணிப்பேட்டை - 632 401; 5. இல. பிரபாகரன், 49, திண்டிவனம் சாலை, கீழ் பெண்ணாத்தூர் - 604 601 தி.அ. மாவ.; 6. ஸ்ரீநிவாஸ்பிரபு, 1/7, CPWD, குடியிருப்பு, பெசண்ட் நகர், சென்னை - 600 090.



●● கோவையில் வேலையில்லாத் திண்டாட்டம் என்பதே கிடையாது. நாணயம் உழைப்பு இவற்றில் நம்பிக்கை உள்ளவர்கள் படித்தவர்கள், குறைவாகப் படித்தவர்கள் யாராயினும் வேலை இருக்கிறது. உதவி தேவைப்படுகிறவர்கள் அணுகவும்.

- இராமராஜன்,
த.பெ.எண் 3736, கோயமுத்தூர் - 641 018

●● அறிவியல் இலக்கியம் என்ற தலைப்பில் கட்டுரை எழுதி எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக்கு அனுப்பவிருக்கிறேன். சுற்றுச் சூழல் பாதிப்பு, உடல் நலப் பாதுகாப்பு, கல்வி போன்ற துறைகளில் தமிழில் நூல்கள், பிரசுரங்கள் வெளியிட்டுள்ளவர்கள் அவற்றை அனுப்பித் தந்தால் உபயோகமாக இருக்கும்.

- க.சீனிவாசன்,
131, சென்ட்ரல் அவென்யூ,
கல்பாக்கம் - 603 102

●● ரவீந்திரநாத் தாகூரின் பெயரில் இயங்கி வரும் மெட்ரிக் பள்ளிக்குத் தாகூரின் களையான ஆளுயர முழு உருவப்படம் தேவைப்படுகிறது. பணம் செலுத்திப் பெறவும் தயாராயிருக்கிறேன்.

- சோ. முருகதாஸ்,
101/5, குமரன் காலனி, பண்ணைவயல் சாலை,
பட்டுக்கோட்டை - 614 601.

●● மகாபாரதச் சுருக்கம் - டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் நூல்நிலைய வெளியீடு - பத்து பகுதிகள் மலிவான விலைக்குத் தரத் தயார்.

- ஆர்.மகாலிங்கம்,
735, 11th Main Road., T.K.Layout, 4th stage,
Mysore - 570 023.

●● வாழைக்காய் (தார்) தோட்டங்களில் எடுத்து, லாரி மூலம் வியாபாரத்துக்கு அனுப்பி அனுபவமுள்ளவன். மொத்த விலைக்கு வாங்கிக் கொள்ளும் கோவை, கேரளா வியாபாரிகள் தொடர்பு கொள்ளவும்.

- பி. சுந்தரம்,
பிளாட் 37, முத்தார் இல்லம்,
ஸ்ரீனிவாச நகர், மகாராஜநகர் (அஞ்சல்)
திருநெல்வேலி-627 011.

●● முதல் ஐந்து நாவல்களில் ஒன்றான சமநடேச சாஸ்திரியின் "தீனதயாளு" மறுபதிப்பு செய்யத் தேவை. புத்தகம் வைத்திருப்பவர்கள் கொடுத்து உதவினால் மறுபதிப்பு செய்ததும் புது புத்தகம் தருகிறோம்.

- வீ.ஜவஹர்,
குமரிப் பதிப்பகம், 8. நீலா தெற்கு வீதி,
நாகப்பட்டினம் - 611 001

●● 'ஏர் கார்கோ - கூரியர் சர்வீஸ்' என்ற பாடத் திட்டத்தின் கீழ் படித்த மாணவர்கள் அது தொடர்பான பாடங்கள், நோட்ஸ்கள் இருந்தால் இரவலாகவோ அல்லது விலைக்கோ கொடுத்து உதவவும். இப்பாட திட்டத்தை அஞ்சல் வழியில் போதிக்கும் நிறுவனம் இருந்தாலும் தெரியப்படுத்தவும்.

- ஏ. விஸ்வகுமார்,
A-6 சாலமன் மாளிகை,
51, வெங்கடேச நாயகன் மூன்றாவது சந்து,
மவுண்ட் ரோடு, சென்னை - 600 002.

●● "தமிழகப் பெண் கவிஞர்கள்" என்ற தொகுப்பு நூல் பிரசுரிக்க எண்ணியிருக்கிறேன். பெண் கவிஞர்கள் தங்கள் கவிதை நூல்களை அனுப்பி வைக்கவும். தேவையானால் நூலுக்குரிய கட்டணமும் அனுப்புகிறேன்.

- எம். எஸ். தியாகராஜன்,
எண் 7, 25வது தெரு, நங்கநல்லூர்,
சென்னை - 600 061.

●● எங்களுடன் நெருங்கிப் பழகி 1964ல் பிலாயை விட்டுப் பிரிந்த நண்பர் கோமஸ் வரனுடன் மீண்டும் தொடர்பு கொள்ள நானும் பிலாய் நண்பர்கள் ராஜகோபாலன், சம்பத்குமார் யாவரும் ஆவலுடன் காத்திருக்கிறோம்.

- எஸ்.கோபாலன்,
3-A, Avenue A, Sector X BHILAI - 490 006.

●● இன்ஜினீரிங் கல்லூரியில் நான் படித்த 25க்கும் மேற்பட்ட புத்தகங்கள் இன்னும் என்னிடமுள்ளன. மெக்கானிகல் இன்ஜினீரிங் நூல்கள் தேவைப்படும் மாணவ, மாணவியர் தொடர்பு கொள்ளவும்.

- என்.சூரிய நாராயணன்,
A-2/8, Musco Colony, Jagdish Nagar, Khopoli,
Raigad Dt. 410 216.

(இப்பகுதி மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்கு கல்கி காரியாலயம் பொறுப்பேற்க இயலாது.)





# சாவதற்கு முன் ஓர் உதவி!

வியாபாரத் தோல்வியால் வாழ்க்கையில் வெறுப்படைந்து தற்கொலை செய்து கொள்ள முடிவெடுத்தான் ரிச்சி டிமாண்டி என்கிற அமெரிக்க இளைஞன். நயாகரா நீர் வீழ்ச்சியின் அருகே நின்று கொண்டு, கிட்டத் தட்ட அதன் விளிம்பிலிருந்து கீழே குதிக்கத் தயாரானான்.

"எக்ஸ்கியூஸ் மீ... ஒரு சின்ன உதவி செய்ய முடியுமா?" என்று பின்னாலிருந்து ஒரு குரல். ஒரு முதியவர் புன்னகை முகத்துடன் நின்று கொண்டிருந்தார்.

"நான் குடும்பத்தோடு நயாகரா வந்திருக்கிறேன். குரூப் போட்டோ எடுத்துக் கொள்ள ஆசை. இதோ காமிரா. தயவு செய்து 'க்ளிக்' செய்து தர முடியுமா? ப்ளீஸ்.."

சாவதற்குமுன் ஒரு உதவியைச் செய்து விட்டுச் சாவோமே என்று 'சரி' என்றான் ரிச்சி.

படம் எடுத்து முடிந்ததும், 'தாங்க்ஸ்' என்று சொல்லி ஒரு இரண்டு டாலர் நோட்டை வலுக் கட்டாயமாகத் திணித்து விட்டு அகன்றார் அந்த முதியவர்.

ரிச்சி - இனி சாகத் தயாராக இல்லை. இரண்டு டாலர் கிடைத்ததே, அதற்காகவா? இல்லை. ஒரு வழி கிடைத்ததே, அதற்காக!

மறுநாள் ரிச்சி நயாகரா அருகில் 'ட்ரிம்'மாக உடை அணிந்து நின்றான். சட்டையில் ஒரு பாட்ஜ். "நீங்கள் குடும்பத்தோடு நில்லுங்கள். நான் உங்கள் காமிராவில் 'க்ளிக்' செய்து தருகிறேன். ஒரு க்ளிக்குக்கு இருபத்தைந்து சென்ட் கொடுத்தால் போதும். மகிழ்வேன்..."

அதுவே பாட்ஜில் காணப்பட்ட கொட்டை எழுத்து வாசகம். அந்தத் தொழிலில் வருமானம் அதிகரிக்கிறது. பின்னால் ஒரு புகைப்பட ஸ்டுடியோவிற்கே அதிபதியாகிறான் ரிச்சி!

நீங்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு சந்திப்பும் வெற்றியில் முடிய வேண்டுமா? சந்திக்கப் போகும் மனிதரைப்பற்றிச் சற்றே சிந்தியுங்கள். தெரியாதவர் என்றால் அவரைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். அவருக்கு எதைப்பற்றிப் பேசினால் பிடிக்கும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

அவரைச் சந்தித்தவுடன் உங்கள் விஷயத்தைப்பற்றிப் பேசாமல் அவருக்குப் பிடித்த விஷயத்தை முதலில் பேசுங்கள். சற்று நேரத்தில் உங்கள் சொந்த விஷயம் அவருக்குப் பிடித்த விஷயமாகி விடும்.

பிரச்னையிலே தீர்வைக்காணக் கூடிய ஆற்றல் பெற்றவர்களைப் பற்றிய செய்திகளோடு, ஊக்க மூட்டும் ஆலோசனைகளையும் வழங்குகிறார் எம்.பி. நிர்மல்.

*"தடைக் கற்களே படிக்கற்கள்." வெளியீடு மனவள மேம்பாட்டுப் பதிப்பகம், 42, கிரியப்பா சாலை, சென்னை - 17. விலை ரூ. 15/-*

- பாலன். பூங்குழலி



# லஞ்சப் பணம் குட்டி போடுகிறது!

●● தஞ்சை மாவட்டம் பண்டாரவாடையைச் சேர்ந்த நசீமாபானு பிரசவத்துக்காக ராஜகிரி மெகாபீஸ் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். ஸிஸேரியன் ஆபரேஷன் செய்த டாக்டர் ஃபரீதா பஷீர், ஏழு அங்குல நீளமுள்ள கத்திரிக்கோலை வயிற்றில் வைத்துத் தையல் போட்டு விட்டார். வலி அதிகமாகி, வேறு ஓர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு டாக்டர் மனோரமா, டாக்டர் ரவி என்பவர்களால் மீண்டும் அறுவைச் சிகிச்சையில் கத்திரிக்கோல் அகற்றப்பட்டது. இத்தகைய சூழ்நிலையில் டாக்டர்கள், நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் மூலம் விசாரணைக்கு உள்ளாகக் கூடாது என்றால் என்ன அர்த்தம்? டாக்டர்கள் என்ன சொர்க்கத்திலிருந்து நேரே பூமியில் குதித்தவர்களா?

தஞ்சாவூர், வி.கே. ராஜராஜன்

●● சேலம் மாவட்டம் நாமகிரிப்பேட்டையில் மையமான இடத்தில், 'மாரியம்மன் கோயில் கட்டுகிறோம்' என்று கூறி ஆளும் கட்சியினரான அதிமுக வினர் சிலர், பல லட்சம் ரூபாய் திரட்டியும் கோயில் திருப்பணி அஸ்திவாரத்தோடு நிற்கிறது. நன்கொடை தந்த அப்பாவிப் பொதுமக்கள் தட்டிக் கேட்க முடியாமல் கைபிசைகின்றனர். கோயில் திருப்பணி என்று பெரிதாக வசூல் திட்டங்கள் வகுக்கும் முதல்வர், இந்த அநியாயத்தைத் தட்டிக் கேட்க வேண்டாமா? கோயிலைக் கட்டித்தர வேண்டாமா?

இராசிபுரம், ஆர்.டி. பாரத்மணி.

●● லஞ்சம் தலைவிரித்து ஆடும் ஒரு துறையில் பணிபுரியும் என் உறவினர் ஒருவர் கூறிய செய்தி இது. அவரது ஆபீசில் தினமும் தலா நூறு ரூபாய்க்குக் குறையாமல் மாமூல் கிடைக்குமாம். மேல் வருமானத்தை குடி, சூதாட்டம் என்று பலரும் செலவழிப்பதைக் கண்ட அதிகாரி ஒரு ஏற்பாடு செய்தாராம். ஊழியர்கள் பெயரில் அவர்களின் மாமூல் விகிதாசாரத்தின்படி ஆர்.டி. கணக்குகள் தொடங்கி அந்த கணக்குகளுக்குப் பணம் கட்டியது போக மீதித் தொகையை அவரே பிரித்துக் கொடுப்பாராம். அந்த வகையில் ஒவ்வொரு நபருக்கும் இருபது ஆர்.டி. கணக்குகள் உள்ளனவாம். லஞ்சம் வட்டியுடன் குட்டி போட்டு ஐந்து ஆண்டு முடிவில் 1,60,000 கிடைக்கும்!

தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20%* |



## மகளிர் ஆண்டு திட்டம்

**1994** சர்வதேச மகளிர் ஆண்டை முன்னிட்டு பெண்கள் பெயரில் செலுத்தப்படும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும். குறைந்த அளவு டிபாசிட் ரூ. 5000/- காலம்: 1 ஆண்டு



## சௌபாக்யலட்சுமி வெகுமதி டிபாசிட்

அ) ஒரே ஒருமுறை ரூ.570/- செலுத்தி 252 மாதங்களுக்குப் பிறகு ரூ.40000/- பெறுவீர்!
ஆ) ஒரே ஒருமுறை ரூ.285/- செலுத்தி 252 மாதங்களுக்குப் பிறகு ரூ.20000/- பெறுவீர்!



## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | **20%** |
| ரூ. 10,000 கீழ் | | **19%** |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**



**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka